# முகவுரை.

---

ம-ா-ா-ஸ்ரீ கு. மதுரை முதலியார் அவர்கள் எழுதிய தமிழ்ப் பெரும் புலவர் என்னும் நூலை யான் முற்றும் நன்றாய்ப் படித்துப் பார்த்தேன். இதில் திருவள்ளுவ தேவர், கம்ப நாடர், ஒட்டக்கூத்தப் புலவர் ஆகிய இம் மூவருடைய சரித்திரங்கள் ஆராய்ச்சியுடன் எழுதப்பட்டிருக்கின்றன. இவர்களுள், திருவள்ளுவ தேவர், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளையும் அறிவிப்பதும், யாவராலும் கண்ணின் மணியெனக் கொண்டு போற்றப் படுவதுமாகிய திருக்குறள் என்னுந் தமிழ் மறையை அருளிய பெரியார். கம்ப நாடர், ஒப்பற்ற காவியமாகிய இராமாயணத்தின் முதல் ஆறு காண்டங்களையும், சடகோபரந்தாதி முதலிய மற்றுஞ் சில நூற்களையும் இயற்றிய கவிச்சக்கிரவர்த்தியார். ஒட்டக்கூத்தர், இராமாயணத்தின் ஏழாவது காண்டமாகிய உத்தர காண்டம், மூவருலா, தக்கயாக பரணி முதலிய நூற்களை யியற்றிய பெரும் புலவர். நமது நாட்டிற் சரித்திரங்களை யெழுதி வைக்கும் வழக்கமில்லாத குறையினல் நம்முடைய நாட்டு ஆன்றோர்களுள் பலருடைய வரலாறுகள் பல்வகைக் கற்பனைக் கதைகளாகிக் கர்ண பரம்பரையாகக் கூறப் பட்டு வருகின்றன. இவற்றினின்று உண்மை வரலாற்றைக் கண்டுரைப்பது எத்தகையார்க்கும் அரிய செயலாகவே யிருக்கிறது. மேற்கண்ட சான்றோர்களைப் பற்றி நூற்களாகவும், வியாசங்களாகவும் பலராலும் எழுதப்பட்டிருப்பனவற்றை யெல்லாம் ம-ா-ா-ஸ்ரீ கு. மதுரை முதலியார் அவர்கள் மிகவு முயன்று ஆய்ந்து, தம்முரை

யானும், பிறர் கோளானும் விடயங்களை விளக்கிக் கூறிக் கற்பார்க்குத் தெளிவு தோன்றும் வகையில் இந் நூலை யெழுதி யிருக்கின்றார். இந் நூலின் ஆராய்ச்சி முறை, நடு நிலையினின்று ஒரு விடயத்தை ஆராயுந் தன்மையை மாண வர்க்கு அளிக்கும் இயல்புடன் இலங்குகின்றது. மேற் கண்ட சான்றோர்களின் நூற்களினின்று அவ்வவ்விடங் களுக்கு வேண்டுவனவாகிய செய்யுட்களை யெடுத்துக் கொண்டு அவற்றின் மூலமாக அவ்வான்றோர்களுடைய கருத்துக்களையும், வரலாற்றின் சில பகுதிகளையும் விளக்கிக் கூறும் பகுதிகள் படிப்பவர்களுக்கு மிக்க களிப்பைத் தருவனவா யிருக்கின்றன. இந் நூல், மாணவர்களுக்குக் கற்றற்குரிய நூலாகவும், நடுநிலையினின்று உண்மை காண விழைவார்க்கு நல் விருந்தாகவும் விளங்குகின்றது.

இங்ஙனம்,

சென்னை,
17—11—29.

கா. ர. கோவிந்தராஜ முதலியார்,
பச்சையப்பன கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர்.

# கம்பர்

•••oOo•••

## கலி விருத்தம்

அம்பரா வணிசடை யரன யன்முதல்
உம்பரான் முனிவரால் யோக ராலுயர்
இம்பராற் பிணிக்கரு மிராம வேழஞ்சேர்
கம்பராம் புலவரைக் கருத்தி ருத்துவாம்.'

## கம்பர் குலம்

நில மடந்தையின் திருவதன மெனத் திகழும் பரத கண்டத்துச் சோணாட்டின்கண் சிறப்புற்று விளங்கிய திருவழுந்தூரில் கம்பர் பிறந்தனர் என்பதை,

" நாரணன விளையாட் டெல்லா நாரத முனிவன கூற
ஆரணக் கவிதை செய்தா னறிந்தவான மீகி யென்பான
சீரணி சோழ நாட்டுத் திருவழுந் தூருள் வாழ்வோன
காரணக் கொடையான் கம்பன் தமிழினுற் கவிசெய் தானே,"

என வருஞ் செய்யுள் வலியுறுத்துகின்றது.

கம்பருடைய அன்னையின் பெயர் இஃதெனத் தெளிந்து கூறுதற்கில்லை. ஆனால், அப் பெரியோரின் தந்தை பெயர் ஆதித்தன் என்பது

' ஆதவன் புதல்வன முத்தி யறிவினை யளிக்கு மண்ணல்
போதவ னிராம காதை புகன்றருள் புனிதன் மண்மேற்
கோதவஞ் சிறிது மில்லான் கொண்டன்மா றன்னை யொப்பான்
மாதவன கம்பன செம்பொன மலரடி தொழுது வாழ்வாம் '

' இம்பரு மும்பர் தாமு மேத்திய விராம காதை
தம்பமா முத்தி சேர்தல் சத்தியஞ் சத்தி யம்மே
யம்பரந் தனனின் மேவு மாதித்தன் புதல்வன ஞானக்
கம்பன்செங் கமல பாதங் கருத்துற விருத்து வாமே '

'தராதலத்தி னுள்ள தமிழ்க்குற்ற மெல்லாம்
அராவு மரமாயிற் றன்றே—யிராவணன்மேல்
அம்புநாட் டாழ்வா னடிபணியு மாதித்தன்
கம்பநாட் டாழ்வான் கவி,'

எனக் காணப்படும் பாக்களான் வெள்ளிடை மலை யென விளக்க முறுகின்றது.

'ஆவின கொடைச்சகார் ஆயிரத்து நூறொழித்துத்
தேவன் திருவழுந்தூர் நன்னாட்டு—மூவலூர்ச்
சீரார் குணாதித்தன் சேயமையப் பாடினான்
காரார்கா குத்தன் கதை,'

என வரும் வெண்பாவினின்று கம்பருடைய தந்தையாகிய ஆதித்தன் என்பான் திருவழுந்தூரை யடுத்துள்ள மூவ லூரிலும் வதிந்திருக்க வேண்டும் என்பது புலனாகின்றது.

வண்ணச் சரபம் முருகதாச சுவாமிகள் தாம் இயற்றி யுள்ள புலவர் புராணத்தில் கம்பர் பிறப்பைப் பற்றிக் கீழ் வருமாறு கூறியுள்ளார்:—

'பெருமையிற் சிறந்தொளிரும் சோழ நாட்டின்கண் ணுள்ள திருவழுந்தூரிலே ஓச்சு குலத்திலே யுதித்த வொருவன், அவ்வூர்ப் பெருங் கோயிற்கு நாடோறுஞ் சென்று, சங்கூதும் திருப்பணி புரிந்து வருவன். அங் ஙனம் அவ்வோச்சன் கோயிற்றிருப்பணி செய்து ஒழுகி வரு நாளில், ஒரு நாள் கோயிற் கம்பத்தருகு ஓர் ஆண் மகவைக் கண்டு, அளவிலா ஆநந்தங் கொண்டு, இளங் கதி ரோனென இலகிய அக் குழந்தையைக் கொண்டுபோய்த் தன் இல்லக்கிழத்தியிடம் ஈந்தனன். புத்திரப் பேற்றி னைப் பெற வேண்டுமெனப் பல நாட்களாகப் பேராவல் கொண்டிருந்த அவ்வோச்சன் மனைவி அம்மதலையை மார் போடணைத்து, உச்சி மோந்து முத்தமிட்டாள். உடனே அம்மங்கையிடம் சுரந்த பாலை யுண்டு அக்குழந்தை பசி

பாற்று. அவ்வற்புத நிகழ்ச்சியைக் கண்ட ஓச்சனும் அவன் வாழ்க்கைத்துணைவியும், 'எல்லாம் வல்ல இறைவரே நம் மனக்கோளுணர்ந்து மகப் பேறளித்தனர் போலும்,' என்றுன்னி, அப்பரம் பொருளின் பாத மலரைப் பன்முறைப் பரவிப் பரிதி போல் விளங்கிய அப் பாலகனைப் பரிவுடன் போற்றி வந்தனர்.'

'திருவழுந்தூரில் வாழ்ந்து வந்த ஓர் ஓச்சன் வீட்டுப் புறக்கடையில் கம்பரை அவர் தாய் ஈன்று உடனே உயிர் துறந்தாள். பின்னர் அவர் அவ்வோச்சனால் சில ஆண்டு வளர்க்கப்பட்டார்,' என ஒரு கன்ன பரம்பரைக் கதை வழங்கி வருகின்றது.

'சோழ நாட்டில் கம்ப நாடு என்னும் பெயரிய ஒரு சிறு நாடு இருந்தது. அந்நாட்டிலிருந்து அரசு நடத்தி வந்த சிற்றரசன் ஒரு கால் நேர்ந்த பெரும் போரில் உயிர் துறந்து வீர சுவர்க்க மெய்தினன். அவ்வமயம் சூல் கொண்டிருந்த அம்மன்னன் மனைவி பகைவாக க தன்னாடு நீங்கித் திருவழுந்தூரை நண்ணி, அவ்வூர்க்கண்ணிருந்த ஓச்சன் ஒருவனால் ஆதரிக்கப் பெற்றனள். பின்னர், அம்மடந்தை அவ்வோச்சன் இல்லத்திலேயே கம்பரை யீன்றெடுத்தாள்,' எனவும் ஒரு கதை வழங்கி வருகின்றது.

கம்பர் அரச குமாரர் என்பதை இருமொழிப் புலவர் திருவாளர் தி. செல்வக்கேசவராய முதலியார் கீழ்வருமாறு மறுத்துள்ளார் :—

"இவர் ஓரரசனுடைய புதல்வர் என்றும் ஓச்சன் வீட்டில் வளர்ந்தவர் என்றும் சிலர் கூறுகின்றனர். திருவழுந்தூர்ப் பிடாரி கோயிற் பூசை செய்யும் ஓச்சனுடைய பிள்ளையே யெனக் கூறுவார் சிலர். இவர் தம் மகன் அம்பிகாபதியை அரசன் கொன்ற காரணம் பற்றிப் பழி வாங்

கத் தருணம் பார்த்திருந்தவர், வேட்டை யாடும்போது ஒரு யானையால் துரத்திவரப்பட்ட அரச குமாரனை, 'காட்டானை விட்டாலும் கவியானை விடாது,' என்று ஈட்டியால் குத்திக் கொன்றனர் என்பதொரு கதையைக் கொண்டு, இவர் க்ஷத்திரிய ரல்லராயின் அங்ஙனம் செய்யத் துணியார் என யூகித்து, இவரை ராஜ வம்சத்தில் பிறந்தவரே யென்பர். இவர் உள்ளபடி க்ஷத்ரியராயின், யாதொரு நாட்டையாவது ஊரையாவது தமிழ் நாட்டு வேந்தரிடத்தில் பெற்றாயினும் வென்றுகொண்டாயினும் அரசியல் நடத்தி யிருக்கலாம். இவருடைய புத்ர பௌத்ரர்களும் அங்ஙனம் செய்திலாமையால், 'மகனறிவு தந்தையறிவு,' என்கிற ப்ரமாணத்தைக் கொண்டும் இவர் க்ஷத்ரியர் என்பது துணிதல் கூடவில்லை.'

'கைம்மணிச் சீரனறிச் சீரறி யாக்கம்ப நாடன்சொன்ன
மும்மணிக் கோவை முதற்சீர் பிழைமுனை வாளெயிற்றுப்
பைம்மணித் துத்திக் கணமணிப் பாந்தட் படம்பிதுங்கச்
செம்மணிக் கண்பதம் பொக்கக்கொல் யானைச் செயதுங்கனே,'

என வாணியன் தாதன் பாடிய வசைப் பாட்டைக் கொண்டும்,

'சீரணி சோழ நாட்டுத் திருவழுந்தூருவச்சன்,' எனக் காணப்படும் பிரதி பேதத்தைக் கொண்டும், கம்பர் ஓச்ச குலத்திற் பிறந்தவரே எனச் சிலர் உறுதியுறக் கூறுகின்றனர்.

முதற்காட்டிய வாணிதாதன் வசைப்பாட்டு வெகுளி காரணமாய் வெளிப்போந்த தாதலான், அக் கவிகொண்டு கம்பர் ஓச்ச குலத்திற் பிறந்தவர் எனக் கழறுதல் சிறிதும் ஏலாது.

பின்காட்டிய பிரதிபேதம் சந்தத்தை நோக்குமிடத்து இடைச் செருகலாக இருக்க வேண்டு மென்பது சில அறிஞரின் துணிபு. தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனர்

வள்ளுவர் வீட்டில் வளர்ந்த காரணத்தால் வள்ளுவர் குலத்தில் தோன்றியவர் எனச் சிலரால் கருதப்பட்டு வருதல் போல், 'கம்பர், ஓச்சர் வீட்டில் சின்னாள் வளர்ந்தமை பற்றி அப் பெரியார் ஓச்ச குலத்திற் பிறந்தவர் எனச் சிலர் கருதுகின்றனர்.

ஆனால் செவ்வனம் ஆராய்வுழி, கம்பர் வேளாள குலத்தில் தோன்றி யிருக்கலாம் என யூகித்தற்குக் கீழ் வருபவை ஆதாரங்களாக உள:—

கம்பருடைய மாணுக்கராகிய ஏகம்பவாண முதலி யாரும் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப முதலி யாரும் சேர சோழ பாண்டியராகிய மூவேந்தரும் கம்ப ருடன் அமர்ந்து பல்நால் அன்னம் அருந்தி யுளர் எனக் கன்ன பரம்பரைக் கதையொன்று வழங்கி வருகின்றது.

கம்பர் தாம் இயற்றிய சடகோபரந்தாதியில், 'இள நாகு சங்கம் கொழுப்பாய் மருதஞ் சுலாங்குருகூரெங் குலக்கொழுந்தே,' என வேளாளர் குலத்தில் திருவவ தரித்த நம்மாழ்வாரைப் புகழ்ந்து போற்றியுள்ளார்.

'உழுங் குலத்திற் பிறந்தாரே யுலகுய்யப் பிறந் தாரே,' எனக் கம்பர் தாம் பாடிய ஏரெழுபதென்னும் நூலிற் கூறியுள்ளார்.

இவ்வண்ணம் கம்பருடைய குலத்தைப் பற்றிப் பற் பலர் பற பலவிதமாய்க் கூறி, அவரவர் தத்தம் கூற்றை நிலை நாட்டப் பற்பல காரணங்களைக் கூறி யிருக்கின்றனர். இவைகளை யெல்லாம் நோக்கியோ, புலவர் புராண ஆசிரியர்,

'கன்னன் பிறப்பும் பிணனிற் றுலங்கிற்று கம்பன்பிறப் பின்னந் தெரிந்தார்க ளிலேயில்லை முக்காலு மிதுமெய்ம்
[மையே,'

எனக் கூறியுள்ளார்!

# இரண்டாம் இயல்

## கம்பருக்குக் கல்வி வந்துற்ற திறம்

'கம்பர் பன்னூல்களைக் கற்றுப் பரந்த கல்வியைப் பெற்றவரல்லர். அவர் வரகவியே,' எனச் சிலர் குருட்டுத்தனமாய்க் கூறித் தம் கூற்றை வலியுறுத்தக் கீழ் வரும் கதையைக் கூறுகின்றனர்:—

'திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளல் இல்லத்தில் கம்பர் தம் இளமைப் பருவத்தில் வளர்ந்து வந்த பொழுது, சடையப்ப வள்ளல் என்பார் தமமக்களுடன் கம்பரையும் பள்ளிக்கு அனுப்பி வந்தனர். அப்பள்ளி யாசிரியர் தமது கம்பங் கொல்லையைக் காத்துவரும் பொருட்டு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மாணவனை அவ்விடத்திற்கு அனுப்பி வருவது வழக்கம். அவ்வழக்கமே போல் ஒரு நாள் கம்பருடைய ஆசிரியர் கம்பரைக் கம்பங் கொல்லையைக் காத்துவரக் கட்டளையிட் டனுப்பினார்.

ஆசிரியரது கட்டளையைப் பெற்ற கம்பர், கம்பங் கொல்லைக்குச் சென்று, அவ் வயலைக் காவல் புரிந்து நின்றனர். அங்ஙனம் அவர் தமது ஆசிரியர் நிலத்தைக் காத்திருந்த பொழுது, உறக்கம் வர அருகிருந்த காளி கோயிலுக்குச் சென்று கண்ணுறக்கங் கொண்டார்.

சிறிது நேரத்தில், அயர்ந்து கண்வளர்ந்திருந்த கம்பர், ஒரு குதிரை தமது ஆசிரியரது நிலத்தில் மேய்வதாகக் கனாக் கண்டு, துடிதுடித் தெழுந்து, கம்பங் கொல்லைக்கு விரைந் தோடினார். அவர் கனாக் கண்ட வண்ணமே அவ்வூர் அதிகாரியாகிய காளிங்கராயனுடைய புரவி கம்பங் கொல்லையை மேயக் கண்டார். அப்பொழுது அவ்விளை

ஞரின் மனம் பெரிதும் வருந்திற்று. உடனே அச் சிறுவர் தம்மால் இயன்றவளவு அத் துரகதத்தைத் துரத்த முயன்றார். பின்னர், அச் சீரிளங் குமரர் தம் முயற்சி யாவும் வீணாயினமை கண்டு, ஆசிரியரது தண்டனைக் கஞ்சிக் காளி கோயிலுக்கோடி, அத் தேவியின் முன்பு கண்ணீரும் கம்பலையுமாய் நின்றார்.

கம்பர் நிலையைக் கண்டு மனமிரங்கிய காளி, கம்பர் முன் தோன்றி, "ஐய, அழேல். நின் நாவை நீட்டுதி," என்றாள். உடனே கம்பர் தந் நாவை நீட்டக் காளியம்மை அவர் நாவில் கலைமகளுக்குரிய பீஜாட்சரத்தை வரைந்தாள்.

காளியின் கருணையால் கவிபாடும் ஆற்றலைப் பெற்ற கம்பர் உடனே விரைந்து கம்பங் கொல்லைகோடி,

"வாய்த்த வயிரபுர மாகாளி யம்மேகேள்
காய்த்த தினைப்புனத்திற் காலைவைத்துச்—சாய்த்துக்
கதிரைமா ளத்தின்ற காளிங்க ராயன்
குதிரைமா ளக்கொண்டு போ,"

என வொரு வெண்பா பாடினார். உடனே காளிங்கராயனது பாய்மா பார்மீது சாய்ந்து உயிர் நீத்தது. இவ்வற்புதச் செய்தியை யுணர்ந்த கம்பருடைய ஆசிரியர், 'காளிங்கராயனால் நமக்கு எத்தகைய இன்னல் நேரிடுமோ!' என வுள்ளங் கவன்று, விரைவிற் கம்பர்பாற் போந்து மனவாட்டத்துடன் நின்றார். ஆசிரியரது உள்ளக் குறிப்பை யுணர்ந்த கம்பர் உடனே,

"வாய்த்த வயிரபுர மாகாளி யம்மேகேள்
காய்த்த தினைப்புனத்திற் காலைவைத்துச்—சாய்த்துக்
கதிரைமா ளத்தின்ற காளிங்க ராயன்
குதிரைமீ ளக்கொண்டு வா,"

எனத் தாம் முன்னர்ப் பாடிய வெண்பாவின் இறுதியடியை மாற்றிப் பாடினார். உடனே மாண்ட குதிரை உயிர்த் தெழுந்தது.

கம்பருடைய ஆசிரியர் தம் மாணவரது கல்வித் திறனைக் கண்டு பெரிதும் வியந்து நின்றார். இவ் விநோத நிகழ்ச்சியைக் கேள்வியுற்றோர் அனைவரும் கம்பர்பால் பெரு மதிப்புக் கொண்டனர். இஃதுணர்ந்த காளிங்கராயன் கம்பரை வருவித்து அப் பேரறிஞர்க்குப் பற்பல வரிசைகள் நல்கிப் பெருஞ் சிறப்புச் செய்தனன்.'

சிலர், 'கம்பர் ஒரு பிரம ராக்ஷஸனுடைய உபதேசத்தால் புலவர் திலகமாய் விளங்குதற்குரிய பெருங் கல்வியைப் பெற்றார்,' எனக் கழறுகின்றனர்.

ஆனால், கம்பர் இயற்றியுள்ள ஈடுமெடுப்புமில் இலக்கியமாகிய விழுப் பொருள் பயக்கும் விரிந்த நன்னூலாம் இராமாயணத்தைத் துருவித் துருவிப் படித்துணர்ந்த தூயோர், கம்பர் காளியின் கருணையால் கவி பாடும் ஆற்றலுற்றார் என்றேனும், பிரம ராக்ஷஸன் உபதேசத்தால் பெருங் கவியானார் என்றேனும் சிறிதும் அஞ்சாமல் கூறற்கு மனம் அமையார்.

கம்பர், சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் ஐம்பெருங் காப்பியங்களிலும், யசோதர காவியம், உதயணகாவியம், நாககுமார காவியம், சூளாமணி, நீலகேசி யெனும் பெயரிய ஐஞ்சிறு காப்பியங்களிலும், பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க் கணக்கு எனப்படும் சங்க நூற்களிலும், சைவத் திருமுறைகள், நாலாயிரப் பிரபந்தம் முதலிய மத நூற்களிலும், தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், யாப்பருங்கலம் முதலிய இலக்கண நூற்களிலும் நன்றாய்ப் பயின்றவர் என்பது சில அறிஞரின் துணிபு.

கம்பர் மிக ஆழ்ந்து படித்த நூற்கள், சிந்தாமணி, திருக்குறள், சூளாமணி, திருவாய்மொழி, புறநானூறு

என்னும் நூற்களாகவே யிருக்க வேண்டு மென்பது இராமாயண இரத்தின மாலையை ஆழ்ந்தாழ்ந்து படிக்கும் ஒவ்வொருவர்க்கும் வெள்ளிடை மலையென விளக்கமுறும். இக் கூற்றிற்குக் காட்டாகக் கீழே வருவனவற்றைக் காண்க :—

களை பிடுங்கச சென்ற உழவர்களின் மன நிலையைத் திருத்தக்க தேவர் தாம் இயற்றிய சிந்தாமணியில் நாமகள் இலம்பகத்தில்,

‘ கண்ணெனக் குவளை யுங் கட்ட லோம்பினர்
வண்ணவாண் முகமென மரையி னுள்புகார்
பண்ணெழுத் தியல்படப் பரப்பி யிட்டனர்
தண்வய லுழவர்தந் தன்மை யின்னதே,’

எனக் கூறியுள்ளார். இப்பாடலின் கருத்தை யெடுத்துக் கொண்ட கல்வியிற் பெரியாராகிய கம்பர், தமது இராமா யணத்துப் பால காண்டத்தில் நாட்டுப் படலத்தில்,

‘ பண்கள்வாய் மிழற்று மின்சொற் கடைசியர் பரந்து நீண்ட
கண்கைகால் முகம்வா யொக்குங் களையலாற் களையி லாமை
உண்கள்வார் கடைவாய் மள்ளர் களைகலா துலாவி நிற்பார்
பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர்
[பெற்றால்,’

என மிக்க அழகு பட அக் கருத்தை யமைத்துள்ள விதம் பெரிதும் வியக்கற்பாலது. இவ்வண்ணம் கம்பர் திருத் தக்க தேவரின் கருத்துக்களை யெடுத்துப் பேரழகு படுத்திய பாக்கள் பல வுள.

தெய்வப் புலமைத் திருவள்ளுவர் தாம் இயற்றிய திருக்குறளில் ஈகையின் சிறப்பை,

‘ நல்லா றெனினுங் கொளறீது மேலுலகம்
இல்லெனினு மீதலே நன்று,’

எனக் கூறியுள்ளார். இச் சீரிய கருத்தைக் கம்பர் தமது இராமாயணத்தில் வேள்விப் படலத்தில், வரையாது

கொடுக்கும் வள்ளன்மை யுடைய மகா பலியின் வாக்கில்

‘ வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ வென்சில வின்னுயி ரேனும்
கொள்ளுத றீது கொடுப்பது நன்றால்,’

எனப் பாடியிருத்தலைக் காண்க.

புற நானூற்றில், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை ஆலத்தூர் கிழார் பாடிய,

‘ ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டிற்றே யாயிழை கணவ,’

என வரும் ஆசிரியப் பாவில் அமைந்துள்ள கருத்தைக் கம்பர்,

‘ சிதைவகல் காதற் றாயைத் தந்தையைக் குருவைத் தெய்வ
பதவியந் தணரை யாவைப் பாலரைப் பாவை மாரை
வதைபுரி குநர்க்கு முண்டா மாற்றலா மாற்றல் மாயா
உதவிகொன் றார்க்கென் றேனு மொழிக்கலா முபாய
[முண்டே,

எனத் தமது விருத்தப் பாவில் அமைத்துக் கொண்டனர்.

நம்மாழ்வார் தாம் இயற்றிய திருவாய் மொழியில்,

‘ கருமாணிக்க மலைமேல் மணித்தடந் தாமரைக் காடுகள்போல்
திருமார்பு வாய்கண்கை யுந்திகாலுடை யாடைகள் செய்ய
[பிரான்
திருமாலெம்மான் செழுநீர் வயல்குட்ட நாட்டுத் திருப்புலியூர்
அருமாயன் பேரன்றிப் பேச்சில ளின்னைமீ ரிதற்கென்
[செய்கேனோ,

எனக் கூறியுள்ள பாட்டின் பொருளைக் கம்பர்,

‘கருமுகில் தாமரைக் காடு பூத்துநீ
டிருசுட ரிருபுறத் தேந்தி யேடவிழ்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினான்,’

என இராமாயணத்தில் திருவவதாரப் படலத்தில் கூறியுள்ளார்.

# மூன்றாம் இயல்

## காதலாம் வலையில் கட்டுப்படல்

கம்பர் ஓரமயம் தொண்டை நாட்டின்கண்ணுள்ள திருவொற்றியூருக்குச் சென்றபோது, ஆண்டுச் சதுரானன பண்டிதன் மடத்திருந்த வல்லி யெனும் பெயரிய அழகிற் சிறந்த கணிகை மாதொருத்தியைக் கண்டு, அவள் அழகில் மயங்கி, அவ் வனிதையுடன் சின்னாள் இன்புற்றிருந்தனர் என்னுங் கூற்றை,

‘இல்லென்பார் தாமவரை யாமவர்தம் பேரறியோம்
பல்லென்று செவ்வாம்பன் முல்லையையும் பாரித்துக்
கொல்லென்று காமனையுங் கண்காட்டிக் கோபுரக்கீழ்
நில்லென்று போனாளென் னெஞ்சைவிட்டுப் போகாளே’

‘நடக்கி லன்னமா நிற்கினல் வஞ்சியாம்
கிடக்கி லோவியப் பாவை கிடந்ததாம்
தடக்கை யான்சது ரானன பண்டிதன்
மடத்து ளாளென் மனத்துறை வல்லியே,’

எனத் தமிழ் நாவலர் சரிதையில் காணப்படும் பாக்கள் வலியுறுத்தா நிற்கின்றன.

பின்பு, ஒரு நாள் வல்லியின் வலிய காதலாற் பிணிக்கப்பெற்ற கம்பர், அக் கணிகை மாதின் விருப்பின்படி

எருமைகள் கொணரப் புழற்கோட்டம் புக்கு, நிரை மேய்ப்பாளாகிய காளிம்பன் என்னும் பெயருடையோனைக் கண்டு, அவன் மேல் சில சிறிய பாக்களைப் பாடி, அவன் ஈந்த ஆயிர எருமைகளைக் கொண்டுவந்து வல்லியின் முன்னிலையில் நிறுத்தினார் என்பது,

'புக்கு விடைதழுவிக் கொண்டுழுத புண்ணெல்லாந்
திக்கிலுறை காளிம்பன் றேனபுழன்மான்—அக்கணமே
தோள்வேந்து கொண்டிலளேற் சுந்தரப்பொற் றோன்றலுக்கு
வாழ்வேதுங் கண்டிலமே மற்று,'

எனத் தமிழ் நாவலர் சரிதையிற் றோன்றும் வெண்பா வான் நன்கு புலனாகின்றது.

மற்றொரு நாள் கம்பர், வல்லிக்குச் சிறிய அணி பல இயற்றுவித்துத் தருவான் திருமயிலைக்குச் சென்று, ஆண்டுத் திருவாலி யென்னுந் தட்டானொருவனைக் கண்டு, அவனைப் புகழ்ந்து சில பாக்கள் பாடி, அவனால் தாம் விரும்பிய அணியெலாம இயற்றுவித்துக் கொண்டு வல்லிபாற் போந்தார் எனபது,

'அண்ணறிரு வாலி யணிமயிலை யத்தனையும்
வெண்ணிலவின சோதி விரித்ததே—நண்ணுந்
தடந்துப்பு விற்பாணர் தன்முகத்தே கொண்டு
நடந்துப்பு விற்பா ணகை,'

என வரும் தமிழ் நாவலர் சரிதை வெண்பாவான் அறியக் கிடக்கின்றது.

இவ்வண்ணம் வல்லியென்னும் வனிதை கம்பர்பால் காட்டிய பெருங்காதலால் அறிவிற் சிறந்தொளிரும் அண்ணலாராகிய கம்பர், வல்லியைத் தம்மின்னுயிரே போல் மதித்து, அவள் விழைவன வெல்லாந் தந்து, அவளுடன் சில பகல் போக்கினர். பின்னர், கம்பர் அக் கணிகையைத் தணத்தற்குச் சிறிதும் உள்ளந் துணியாதவராய், அப் பொதுமகளையுடன் கொண்டு சோணாடு போந்து, அந்

நாட்டில் அத் தெரிவையுடன் சில நாள் களிப்பென்னுங் கடலுள் ஆழ்ந்திருந்தனர்.

கம்பர் சோணாட்டில் வல்லியோடு வாழ்ந்து வந்த அமையத்து, ஒரு நாள், கம்பருக்கு ஆருயிர்த் துணைவராய் விளங்கிய சடையப்ப வள்ளல் என்பார், வல்லி வசித்திருந்த இல்லத்தை மழை நீர் உள்ளொழுகாவண்ணம் ஓரிரவிற்குள் நெற்கதிரான் வேய்ந்தனர் எனச் சிலர் கூறுங் கூற்றை,

'தனதா னியத்தி லுயர்ந்தோர்க டாமே யெனனுந் தருக்கேயோ
வினவா திரவி னெற்கதிரான் வேய்ந்தார் வல்லி வீடதல்லாற்
கனிசேர் தமிழ்க்குப் பன்னிரண்டு கடக யானைக் காடளித்த
மனைவாழ் வுடையான் வெண்ணெய்நல் லூர்வாழ் வானசோழ
[மண்டலமே.'

என வரும் சோழமண்டல சதகச் செய்யுளும்,

'பொதுமாதர் வீட்டைப் புகழ்பெற வேநெற்
கதிரானே வேய்ந்தருளுங் கங்கைப்—பதிநேர்
வருவெண்ணெய் நாடன் வருநா வலர்கருத்
தருவா னவன்சடையன் றான,'

என வரும் வெண்பாவும் வலியுறுத்துகின்றன.

கம்பர் வல்லியைப் பிரிந்த பின்னர்க் குறும்பை யென்பாளைக் காதலித்து அம்மாதுடன் சின்னாள் இன்புற்றிருந்தும், வல்லிபால் தாம் வைத்திருந்த காதலை மறக்கவில்லை என்பது,

'சொல்லியைச் சொல்லி னமுதான சொல்லியைச்
[சொற்கரும்பு
வில்லியை மோக விடாய்தவிர்ப் பாளை விழியம்பினாற்
கொல்லியைக் கொல்லியம் பாவையொப் பாளைக்
[குளிரொற்றியூர்
வல்லியைப் புல்லிய கைக்கோ விவர்வந்து வாய்த்ததுவே,'

எனக் காணப்படும் தமிழ் நாவலர் சரிதையான் தெரிகின்றது.

கம்பர், களந்தைப் பதியிலிருந்த ஒரு வனிதையை விழைந்து, அம் மடவரலுடன் சில பகல் இன்பக் கடலுள் திளைத்திருந்திருக்க வேண்டும் என்று,

'வில்லி களந்தைமின்னை விண்ணவர்தங் கோமானை
வல்லிநெடுஞ் சேடனையும் வாணனையும்—புல்லியுறப்
பார்க்கும்போ தும்மதராம் பற்றும்போ துந்தனத்தைச்
சேர்க்கும்போ தும்பிணைப்பஞ் சென்று,'

என வரும் தமிழ் நாவலர் சரிதைப் பாட்டான் நாம் ஊகித்துணரலாம்.

ஒரு கைக்கோளன், கல்விக் கடலாய் விளங்கிய கம்பரது கவின்பெறு பாடலைப் பெற விரும்பி, அக் கருத்தைத் தன் ஆருயிர்த்துணைவியிடம் கூற, அம் மங்கை, தன் கொழுநன் விழைவுற்றதை முடிப்பான் கருதி, தன்னாயகனை வீட்டின் ஒருபால் கரந்திருக்கச் செய்து, தன் கூரியவேற் கண்ணால் கல்வியிற் சிறந்தொளிரும் கம்பரை மயக்கிப் படுக்கை யறைக்குள் அழைத்துச் சென்றனள் என்றும், அக்காலை, கரந்து நின்ற கைக்கோளன் ஒரு குறுந்தடியுடன் விரைந்தோடிவந்து, கம்பர் சென்னிமேல் அத் தடிகொண்டு புடைப்போன் போல் நடித்தனன் என்றும், அவ்வமயம், கம்பர், தடியடிக்கஞ்சி,

'மய்க்கிணை யான விழிக்கணை கொண்டு மருட்டி யழைத்திடலால்
பொய்க்கள வாகப் புகுந்தது முண்டு புணர்ந்த துமில்லையடா
கய்க்கிசை வான குறுந்தடி கொண்டு கழுத்தை நெரிக்கவரும்
கய்க்கள வாவென் தங்கைய டாநின் றாம டாவிடடா,'

என்று ஒரு பாப் பாடினர் என்றும் ஒரு கதை வழங்கி வருகின்றது.

இவ்வண்ணமே கம்பர் ஒரு நாள் ஒரு வலைஞனுடைய மனைவியது கண்வலையிற் சிக்கி, அம் மடந்தையுடன் பள்ளி யறையில் இருந்து, அம்மங்கையின் மணாளனைக் கண்டு அஞ்சி,

'இருளை யிருள்விழுங்கி யெவ்விடமுந் தோன்றா
திருவிழியுங் கோல்வழியே செல்ல—வருமல்லில்
வந்ததுண்டு சேர்ந்ததில்லை மாலேயல் லாமலே
அந்தமனை யுனறனமனை யே,'

என்றொரு வெண்பா பாடினர் எனவுட கர்ண பரம்பரைக் கதை யொன்று இந் நில வுலகில் நிலவுகின்றது.

இன்னோரன்ன கதைகளான் கல்வி யறிவிற் சிறந் தோளிர்ந்த கம்பரும் தமது இளம் பருவத்துக் கருவேள் கணையினின்றும் பிழைத்துச் செல்லும் ஆற்றலற்றவரா யிருந்தனர் என்பது வெள்ளிடை மலையென விளங்குகின் றது. 'கற்றனர் ஞானமின்றேற் காமத்தைக் கடக்க லாமோ,' என மாரீசன் வதைப் படலத்தில் கம்பர் கூறிய தற்கு அவர் சரித்திரமே காட்டாய் நின்றது.

# நான்காம் இயல்

## இருநிலம் புகழ் இராமாயண மியற்றல்

கடலெனப் பரந்து கற்றோர் மனங்கவர் கவின்பெறு இராம சரிதையைப் பேரறிவாளராகிய கம்பர் பாடியதற் குக் காரணம், அப் புலவர் பெருமானர் இராம பிரானர் மாட்டுக் கொண்டிருந்த சீரிய பக்தியே யென்பது,

'ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசை முற்றவு நக்குபு புக்கென
ஆசை பற்றி யறையலுற் றேன்மற்றிக்
காசில் கொற்றத் திராமன் கதையரோ,'

என்றும்,

'ஆங்கவன் புகழ்ந்த நாட்டை யனபெனு நறவ மாந்தி
மூங்கையான் பேச லுற்றா னென்னயான் மொழியலுற்றேன்,'

என்றும் அப்பெரியார் பாடியுள்ள பாடல்களானே நன்கு விளங்குகின்றது.

கம்பர், கல்வியாகிய கருந்தனத்தைப் பெற்றதற்குக் காரணமாயிருந்த சடையப்ப வள்ளளின் குடிப்பிறந்தோர் இராம பக்தி யுடையோர் என்பதற்குச் சான்று சடையப்ப வள்ளலுக்குச் சராராமர் என்னும் மற்றொரு பெயர் வழங்குவதே யெனச் சில அறிஞர் கருதுகின்றனர். கம்பர் சடையப்ப வள்ளலாரது குடியுடன் பெரும் பழக்க முடையோராதலான், அப் புலவர் பெருமானுக்கு இராம பக்தி யுண்டாயதற்கு அக் குடிப் பழக்கமும் ஒரு காரணம் எனக் கூறலாம்.

அன்றியும், கம்பர் காலத்து, வட மொழியில் ஆதி கவி யென விளங்கிய வான்மீக முனிவர் இயற்றிய இராமாயணத்தின் திட்ப நுட்பங்களை அறிவிற் சிறந்த ஆன்றோர் பலரானும் பெரிதும் போற்றப்பட்டு வந்தன என்பதை,

‘ வாங்கரும் பாத நான்கும் வகுத்தவான் மீகி யென்பான்
தீங்கவி செவிக ளாரத் தேவரும் பருகச் செய்தான்,

எனுங் கம்பரது கூற்றே வலியுறுத்தலினால், அத்தகைய சிறந்த சரிதையை அமிழ்தினு மினிய தண்டமிழ் மொழியில் இயற்றல் உலகிற்குப் பெரும் பயனாகும் எனக் கல்விக் கடலாய் விளங்கிய கம்பர் கருதி இராமாயணத்தை யியற்றி யிருக்கலாம் என ஊகித்தலும் கூடும்.

இனி, கம்பர் இராமாயணத்தின் பெரும் பகுதியை திருவெண்ணெய் நல்லூரிலிருந்து பாடினார் என்பதற்கு,

‘ நடையி னின்றுயர் நாயகன் றோற்றத்தின்
இடைநி கழ்ந்தவி ராமாவ தாரப்பேர்த்
தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை
சடையன வெண்ணெய்நல் லூர்வயிற் றந்ததே,''

என வரும் இராமாயணப் பாயிரச் செய்யுளே சான்றாயுளது.

இராமாயணத்தின் சில பகுதிகள் திருவொற்றியூரில் இரவில் பாடப் பெற்றன வென்றும், அக்காலைக் கம்பரது கட்டளைப்படி அப் பெரும் புலவரின் மாணக்கர்கள் பலர் சலியாது எழுதி முடித்தற் பொருட்டு அவ்வூர்க் காளி யம்மை தீப் பந்தம் பிடித்தனள் என்றும் சில அறிஞர் கூறுவதை,

‘ ஒற்றியூர் காக்க வுறைகின்ற காளியே
வெற்றியூர் காகுத்தன் மெய்ச்சரிதை—பற்றியே
நந்தா தெழுதுதற்கு நல்லிரவின மாணுக்கர்
பிந்தாமற் பந்தம் பிடி,’

என வரும் தமிழ் நாவலர் சரிதை வெண்பா வலியுறுத்து கின்றது.

கம்பர் தாம் இயற்றிய சிறந்த இராம கதைக்கு இட்ட பெயர் இராமாவதாரம் என்பது,

‘ நடையி னின்றுயர் நாயகன தோற்றத்தின
இடைநி கழ்ந்த விராமாவ தாரப்பேர்த்
தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை
சடையன வெண்ணெய்நல் லூராவயிற் றந்ததே,

எனவும்,

‘ இத்த லத்து மிராமா வதாரமே
பத்தி செய்து பரிவுடன கேட்பவா
புத்தி மிக்கரும் புண்ணிய முந்தரு
மெத்த லத்து மவனடி யெய்துவார்,”

எனவும் காணப்படும் இராமாயணப பாயிரச செய்யுட் களான் நமக்கு வெள்ளிடை மலை யென விளங்குகின்றது.

பரி பாடல் எனும் பெயரிய பண்டைப் பனுவற் கண்ணும் சிநதாமணி யெனும சீரிய காப்பியத்தினும் கந் தியார் என்பார் தம் மொழிகளையும் பாடல்களையும் இடை மடுத்தாற் போல் கம்ப இராமாயண மென இப்பொழுது வழங்கப் பெறும் இவ் விழுமிய நூற் கண்ணும் பிறருடைய

பாக்கள் இடை யிடையே சேருகப் பெற்றுள என்பது சில அறிஞரின் துணிபு. வெள்ளியம்பலத் தம்பிரான் என்னும் பெயருடையாரே அவ்வண்ணம் மனந் துணிந்து தம் பாக்களைக் கம்ப இராமயணத்தின் இடையிடையே புகுத்தினர் என்றும், அங்ஙனம் புகுத்தப் பெற்றுள்ள பாடல்கள் இன்றும் வெள்ளிப் பாடல்கள் என வழங்கப் பெற்று வருகின்றன என்றும் சில புலவர் கூறுகின்றனர்.

கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றிய இடம் திருவரங்கப் பெரிய கோயில் என்பதும், அந் நாள் பங்குனி யுத்தர நாள் என்பதும்,

‘ திண்மை யேறுங் கம்பனிடஞ் செய்யத் தகும்பல் சிறப்பயாந்து
நன்மை யேறு மிராமகதை நற்பேர் புவியிற் றழைத்தேற
வுண்மை யேறுந் திருவரங்கத் தொருவன சபையி லுத்தரநாள்
வண்மை யேற வரங்கேற்றி வைத்தார் சோழ மண்டலமே,

என வரும் சோழமண்டல சதகச் செய்யுளானும்,

‘ பண்ணிய விராம காதை பங்குனி யத்த நாளில்
கண்ணிய வரங்கர் முனனே கவியரங் கேற்றி னேனே,

என வரும் இராமாயணத் தனியனாலும் நன்கு விளங்குகின்றன.

கம்பர் தாமியற்றிய இராமாயணமாகிய இனிய நூலை அரங்கேற்றும் பொருட்டுத் திருவரங்கப் பெரிய கோயிலை நண்ணி, அவண் சிறப்புற்றிருளிரா நிற்கும் பிரணவாகார விமானத்து அறிதுயில் கொண்டிலகும் கார்மேக வண்ணனைக் கண்ணுறக் கண்டு களித்தும், மன மொழி மெய்களான் பன்முறை இறைஞ்சியும் நின்றார்.

கம்பரது உயரிய பக்தியைக் கண்ட இறைவர், அப் புலவர் பெருமானைத் தம்மடியவர்க்கு அடியாராக்கக் கருதி; கோவில் அருச்சகர் ஒருவர்பால் தோன்றிக்

கம்பரை விளித்து, 'நஞ் சடகோபனைப் பாடினையோ?' என்று வினவினார். உடனே கம்பர், நம்மாழ்வாரை மனத் தான் வணங்கி,

'வேதத்தின முன்செல்க மெய்யுணர்ந் தோர்விரிஞ் சன்முத
[லோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின முன செல்க குணங்கடந்த
போதக் கடலெங்க டனகுரு கூர்ப்புனி தனகவியோர்
பாதத்தின முன்செல்லு மேதொல்லை மூலப் பரஞ்சுடரே,'

எனத் தொடங்கித தேனினு மினிய நூறு அநதாதிச் செய்யுள்களைப் பாடி முடித்தனர்.

கம்பர் சடகோபரநதாதியைப் பாடி முடித்த பின்னர்ததான் அவரது இராமாயண அரங்கேற்றம் இனிது நிறைவேறி யிருக்கவேண்டும் என யூகித்தற்கு இடனுளது.

'தேவிற் சிறந்த திருமாற்குத் தக்கதெய் வக்கவிஞன்
பாவிற் சிறந்த திருவாய் மொழிபகர் பண்டிதனே
நாவிற் சிறந்தவம் மாறற்குத் தக்கநன னாவலவன
பூவிற் சிறந்தவாழ் வான்கம்ப நாட்டுப் புலமையனே,

என வரும் சடகோபரநதாதிப் பாயிரச் செய்யுளான் திருவரங்கததிருநத அறிஞரனைவரும திருமாற்கு நம்மாழ்வார் எவ்வண்ணம் உரியரோ அவ்வண்ணம் நம்மாழ்வார்க்கு உரிய நன்னாவலர் கம்ப நாட்டாழ்வாரே யென மதித்துக் கம்பர்க்குப் பெருஞ் சிறப்புச் செய்திருக்க வேண்டும் என்பது தெரிகின்றது.

கம்பர், கைம்மாறு கருதாது தமக்குப் பெரு நன்றி செய்து வநத திருவெண்ணெய் நல்லூர்ச சடையப்ப வள்ளலின் பூத வுடம்பு பொன்றினும், அத தண்ணளியுடையாரது புகழுடம்பு இருநிலத்திடை என்ஞான்றும் நிலவுமாறு செய்வான் விழைநது, தாமியற்றிய அரும் பெருங் காப்பியமாகிய இராமாயணத் திடையிடையே ஒருபான் பாக்க

ளான் அவ்வள்ளலாரை வாயாரப் புகழ்ந்துளர். அப் பாடல்களுள் சிலவற்றைக் கீழே காண்க :—

‘ விண்ணவர் போய பின்றை விரிந்தபூ மழையி னூலே
தண்ணெனுங் கான நீங்கித் தாங்கரும் தவத்தின் மிக்கோன
மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன வெண்
[ணெய்
அண்ணறன் சொல்லே யன்ன படைக்கல மருளி னானே’
(பால காண்டம் வேள்விப்படலம்)

‘ அரம டந்தையர் கற்பக நவநிதி யமிர்தம்
சுரபி வாம்பரி மதமலை முதலிய தொடக்கற்
றொரு பெரும்பொரு ளின்றியே யுவரிபுக் கொளிப்ப
வெருவி யோடின வெண்ணெய்வாழ் கண்ணன மேவாரின் ’
(பாலகாண்டம் அகலிகைப் படலம்)

‘ வண்ண மாலை கைபரப்பி யுலகை வளைந்த விருளெல்லாம்
உண்ண வெண்ணித் தண்மதியத் துதயத் தெழுந்த நிலாக்கற்றை
விண்ணு மண்ணுந் திசையனைத்தும் விழுங்கிக் கொண்ட விரி
[நனீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன புகழ்போ
[லெங்கும் பரந்துளவால்’
(பாலகாண்டம் மிதிலைப் படலம்)

‘ மஞ்சினிற் றிகழ்தரு மலையை மாக்குரங்
கெஞ்சுறக் கடிதெடுத் தெறிய வேநளன்
விஞ்சையிற் றாங்கினன சடையன வெண்ணெயில்
தஞ்சமென றோர்களைத் தாங்குந் தனமைபோல் ’
(யுத்தகாண்டம் சேது. படலம்)

‘ வாசங் கலந்த மரைநாள நூலின் வகையென்ப தெனனை
[மழையென்
றூசங் கைகொண்ட கொடைமீளி யண்ணல் சரராமன்

தேசங் கலந்த மறைவாணர் செஞ்சொ லறிவாள ரெனறிம்
[முதலோர்
பாசங் கலந்த பசிபோல கன்ற பதகன் றுரந்த வுரகம் ’
(யுத்தகாண்டம் நாகபாசப் படலம்)

வன்னிநாட் டியபொன் மௌலி வானவன் மலரின் மேலான்
கன்னிநாட் டிருவைச் சேருங் கண்ணனு மாளுங் காணி
சென்னிநாட் டெரியல் வீரன் றியாகவி னோதன் றெய்வப்
பொன்னிநாட் டுவமை வைப்பைப் புலன்கொள நோக்கிப் [போனான்'

(யுத்தகாண்டம் மருத்துமலைப் படலம்)

அரியணை யனுமன் றாங்க வங்கத னுடைவா ளேந்தப்
பரதன்வெண் குடைக விக்க விருவருங் கவரி வீச
விரைசெறி குழலி யோங்க வெண்ணெயூர்ச் சடையன் றன்ன
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி'

(யுத்த. திருமுடி. படலம்)

மறையவர் வாழி வேத மனுநெறி வாழி நன்னூல்
முறைசெயு மரசர் திங்கண் மும்மழை வாழி மெய்ம்மை
யிறையவ னிராமன் வாழி யிக்கதை கேட்போர் வாழி
யறைபுகழ்ச் சடையன் வாழி யரும்புக ழனுமன் வாழி'

(யுத். விடை. பட.)

கம்பர் இராமாயணம் பாடியதைப் பற்றிக் கீழ் வரும் ஒரு கதை நெடு நாட்களாக வழங்கி வருகின்றது :-

சீருஞ் சிறப்பு மெய்திப் பொன்னொடெனப் பொலிவுற்று விளங்கிய திருவெண்ணெய் நல்லூரில் பெருவாழ்வு வாழ்ந்து வந்த சடையப்ப வள்ளல் என்பார் ஒரு நாள் கம்பரை நோக்கி, "கல்வி யறிவால் கவினுடன் விளங்கும் ஐய, உன் பெயர் நீண்ட காலம் இந் நிலவுலகின்கண் நிலைத்திருக்கும் வண்ணம் ஆரியத்தில் அழகுற அமைந்துள இராமாயணமெனும் சீரிய பனுவலைத் தேனினு மினிக்கும் தீந்தமிழ் மொழியில் மொழிபெயர்த்திடுக," என நவின்றார். கம்பர் அக்காலைச் சடையப்ப வள்ளலாரின் கருத்திற் கிசைந்தார். எனினும், கம்பர், சடையப்ப வள்ளலார் கருதிய கருமத்தைக் கடிதிற் செய்து முடிக்க முயன்றிலர். அஃதுணர்ந்த சடையப்ப வள்ளலார், 'நாம் கூறி

யதைக் கம்பன் விரைந்து செய்யான் போலும். சோழ மன்னனைக் கொண்டேனும் நமது கருத்தை முடித்துக் கொள்ளல் நன்று,' எனத் தமக்குள் எண்ணிச் சோழன் பாற் சென்று தமது கருத்தை வெளியிட்டார்.

சடையப்ப வள்ளலாரது மனக்கோ ளுணர்ந்த சோழ மன்னன் சிறிது நேரம் அமைதியுடனிருந்து சிந்தித்துப் பின்னர்த் தான் அவ்வண்ணமே கம்பரைக் கொண்டு இராமாயணம் இயற்றுவிப்பதாகக் கூறிச் சடையப்ப வள்ளலார்க்கு விடை கொடுத்தனுப்பினான்.

பின்னர், சோழன், 'நாம் வடமொழியிலுள்ள இராம சரிதையைத் தமிழில் இயற்றும்படி கம்பர்க்கு மாத்திரம் கட்டளை யிடின், அந் நல்லிசைப் புலவர் அதனை விரைந்தியற்றி முடியார். ஆதலான் நாம் ஒட்டக் கூத்தர்க்கும் கம்பர்க்கும் அத்திருப் பணியைச் செய்து முடிக்கக் கட்டளையிடுவோம். அப்பொழுது அவ்விரு பெரும் புலவரும் தத்தம் பாராற்றலைக் காட்டுவான் நாம் கருதியதை விரைவுடன் செம்முறச் செய்து முடிப்பர்,' எனச் சிந்தித்துக் கம்பரையும் ஒட்டக் கூத்தரையும் வரவழைத்தான்.

சோழ மன்னன், தன் அவைக்களம நண்ணிய கம்பரையும் ஒட்டக் கூத்தரையும் நோக்கி, "புலவர்காள், ஆரியத்தில் ஆழ்ந்த கருத்துக்களுடன் அழகு பெற்றொளிரும் இராம சரிதையை அம்மொழி வல்லுநர் பன்முறை படித்தும் பல்லோர்க்கெடுத்துரைத்தும் பரமானந்த முற்று வருகின்றனர். அச் சீரிய சரிதையை நீவிர் இருவரும் தண்டமிழ் மொழியில் தனித்தனி இயற்றின், இவ்வுலகோர் பேரானந்தப் பெருங்கடலில் ஆழ்வதுமன்றி, நும் புகழுடம்பு இரவியும் இந்துவும் இந்நிலமிசை யிலகும் வரை நிலைத்து நிற்கும்," எனக் கூறி, அப் புலவர்களை ஊக்கினன்.

கம்பரும் ஒட்டக் கூத்தரும் சோழன் கருத்திற் கிசைந்து சென்றனர். பின்னர், ஒட்டக் கூத்தர் பால்

காண்ட முதல் ஐந்து காண்டம் பாடி ஆறாங் காண்டத்தில் கடல் காண் படலம் வரைப் பாடி முடித்தார். ஆனால், கம்பர் அத்துணை கால மட்டும் கடவுள் வணக்கமுஞ் செய்யாமல் காலத்தைப் போக்கி வந்தார். அச் செய்தியை யுணர்ந்த சடையப்ப வள்ளலார், சோழன்பாற் சென்று, "மாநிலம் புரக்கு மன்ன, இராமாயணத்தைப் பாடி முடிக்கும் வண்ணம் கம்பர்க்கும் ஒட்டக் கூத்தர்க்கும் கட்டளையிட்டு விட்டு வாளா விருத்தல் தக்கதன்று. சுடர் விளக்கிற்கும் தூண்டு கோலொன்று இன்றியமையாத தன்றோ?" எனக் குறிப்பிற் சில மொழி கூறிச் சென்றார்.

பின்னர், சோழன் கம்பரையும் ஒட்டக் கூத்தரையும் தன் அவைக்களம் வருவித்து, அவர்களை நோக்கி, "புலவீர், நீவிர் இருவரும இராமாயணத்தில் எதுவரைப் பாடி யுள்ளீர்?" என்று வினவினன். அவ்வமயம் ஒட்டக் கூத்தர் தாம கடற்காண் படலம் வரைக்கும் பாடி யிருப்ப தாகக் கூறினர். ஆனால், கம்பர் அதுகாறும் ஒரு செய்யுளும் பாடாதிருந்தும், தாம் கடற்காண் படலத்துக் கப்பாலுள்ள திருவணைப்படலம் வரைக்கும் பாடியுள்ள தாகப் பொய்யுரை புகன்றனர்.

கம்பர் மொழிந்ததைக் கேட்ட சோழன், கம்பரைப் பார்த்து, "அறிவுடைப் புலவீர், நீவிர் யாத்துள்ள செய்யுட்களுள் ஒன்றை யெடுத்துப் பொருள் விளக்கிக் கூறும்," என்றான். உடனே கம்பர், திருவணைப் படலத்தை மாத்திரம் எழுபது செய்யுட்களில் பாடிக்கொண்டு, அவற்றுள்,

'குமுத னிட்ட குலவரை கூத்தரில்
திமித மிட்டுத் திரியுந் திரைகடல்
தமித மூர்புக வானவர் துள்ளினர்
அமுத மின்னு மெழுமெனு மாசையால்,'

என்னும் ஒரு பாடலை யெடுத்து அதன்கண் ணுள்ள சொன்னோக்கு, பொருணோக்கு, தொடை நோக்கு முதலிய வற்றைப் பலர்க்கும் நன்கு விளங்கும்படி பகர்ந்தனர்.

அக்காலை, ஒட்டக் கூத்தர், கம்பரை நோக்கி, "அறிஞரே, நீவிர் துளியைத் துமியென வுமது செய்யுளில் ஆண்டுள்ள திறம் பெரிதும் வியக்கற்பாலதா யுளது. யான் இதுகாறும் அத் திரி சொல்லைக் கேட்டிலேன்; நூற்களிற் படித்துமிலேன். நீர் அவ்வருமொழியை எந் நூலிற் படித்துள்ளீர்?" எனப் பரிகசித்துப் பேசினர்.

அப்போழ்து, நுண்ணறிவுடைய கம்பர், "புலவரே, யான் ஆண்டுள்ள துமி யென்னும் மொழி நூல் வழக்கில் இல்லை. அதனை யான் நுமக்கு நாளைக் காலை உலக வழக்கிற் காண்பிக்க வல்லேன்," என்று கூறிவிட்டுத் தம்மகஞ் சென்றார்.

பின்னர், நாமகளின் நல்லருள் பெற்று விளங்கும் கம்பர், சிறிது நேரம் கலைமகளின் திருவடிக் கமலத்தைக் கருத்துற வுன்னி, மெய் மறந்து நின்றார். அக்கணமே, அடியவர் நினைத்தற்கு முன்னர் அன்புடன் விரைந்தேகும் வெண்டாமரையாள் கம்பர் முன் தோன்றி, "ஐய, நீ வேண்டி நிற்பது யாது?" என மிக்க பரிவுடன் வினவினாள். அப்பொழுது கம்பர் தமக்கும் ஒட்டக் கூத்தர்க்கும் நிகழ்ந்த வாக்கு வாதத்தைக் கூறி, தமது வாக்கை மெய்ப்பிக்கும்படி வாணியை வேண்டிக்கொண்டனர். கலைமகள் கம்பரை நோக்கி, "அன்ப, நாளைக் காலை, அவ்வொட்டக் கூத்தனை இடைத் தெருவிற்கு அழைத்துக் கொண்டு வருக," எனக் கட்டளை யிட்டுவிட்டுக் கரந்தனள்.

கலைமகளின் கட்டளைப்படியே கம்பர், சோழனையும் ஒட்டக் கூத்தரையும் மறு நாட் காலை இடைத் தெருவிற்குக் கூட்டிக் கொண்டு வந்தார். அக்காலை, அவ்வீதியில்

ஓர் இல்லத்தில் கலை மகள் ஓர் இடைப் பெண் வடி வெடுத்து, வேதத்தைத் தயிர்த் தாழியாகவும், வேதாந்தத் தைத் தயிராகவும், கலைகளைத் தயிர் கடை மத்தும் கயிறு மாகவும், புராணேதிகாசங்களைச் சிறு குழந்தைகளாகவுங் கொண்டு தயிர் கடைந்து கொண்டிருந்தாள். அங்ஙனம் இருந்த கலை மகள், கம்பரும் ஒட்டக் கூத்தரும் சோழனும் தன்னகம் நெருங்கி வரும் தருணத்தில், அவர்கள் செவியில் படும்படி, தன்னருகில் இருந்த குழந்தைகளைப் பார்த்து, "குழந்தைகாள், மோர்த் துமி உங்கள் மேல் தெறிக்கும்; விலகி யிருமின," என்றாள். உடனே கம்பர், ஒட்டக் கூத் தரைப் பார்த்து, "புலவீர், கேட்டீரா?" என்றார். அப் பொழுது ஒட்டக் கூத்தர் நாணி வாளா விருந்தார்.

பின்பு, ஒட்டக் கூத்தர், 'இவ்விடம் நமக்குத் தெரிந்த இடமாயிற்றே! இவண் நேற்று வரை ஓரில்லமும் இல் லையே! இன்று ஈண்டு இவ்வீடு தோன்றி யிருந்ததற்குக் காரணம் யாது?' எனத் தமக்குள்ளே சிறிது நேரம் சிந்தித்து, அவ்வீட்டிற்குள் நுழைந்தார். அவ்வமயம் கலை மகள் குழந்தைகளுடன் ஒட்டக் கூத்தர் பார்த்துக் கொண்டிருந்த பொழுதே மறைந்தாள். அவ்வற்புதத் தைக் கண்ட ஒட்டக் கூத்தர், அது வாணியின் திருவிளை யாடல் என வுணர்ந்து வீடு திரும்பினார்.

பின்னர், ஒட்டக் கூத்தர், ஆறு திங்களில் இராமாய ணம் முழுவதையும் பாடி முடித்துவிட்டார்; எனினும், கலை மகளின் அருளொடு விளங்கும் கம்பர் பாக்களின் முன் தம் பாக்கள் சிறப்புற்றிரா வென்பதை அப் புலவர் நன் குணர்ந்தார். ஆதலான், அக் கவிஞர் தாம் வருந்திப் பாடிய பாக்களையுடைய ஏடுகளை யெல்லாம் ஒரு நாள் கிழித் தெறிந்து கொண்டிருந்தார்.

அவ்வமயம் ஒட்டக் கூத்தர் வீட்டு வழியே சென்று கொண்டிருந்த கம்பர், ஒட்டக் கூத்தரின் செய்கையை

புணர்ந்து, அப் புலவர்பாற் சென்று, அவர் கரத்தைப் பற்றிக் கொண்டு, "நல்லிசைப் புலவீர், நீவிர் மிக வருந்தியியற்றிய இசசெய்யுட்களை யெல்லாம் இவ்வண்ணம் கிழித்தெறிதற்குக் காரணம் என்னை?" என வினவினர். அக்காலை, ஒட்டக் கூத்தர், "நாமகளின் நல்லருள் பெற்றிலகும் நுந்தம் பாக்களுக்கு முன் என் பாக்கள் சிறப்புறா வெனக் கருதியே யிவ்வாறு செய்கின்றேன்," என்று விடையளித்தார். அப்பொழுது கம்பர், கிழிக்கப்பெறா தொழிந்தவை போக, எஞ்சி நின்ற ஏடுகளை யெடுத்துப் பார்க்க, உத்தர காண்டம் முழுவதையும் அவ்வேடுகள் கொண்டிருப்பதைக் கண்டு, ஒட்டக் கூத்தரை நோக்கி, "தண்டமிழ்ப் புலவீர், யான் யுத்த காண்டம் வரைக்கும் பாடி யுமது உத்தர காண்டத்தை யிறுதியில் சேர்த்துக் கொள்கின்றேன்," என்று கூறிவிட்டு அவ்வேடுகளை யெடுத்துக் கொண்டு வீடு வந்து சேர்ந்தார்.

பின்பு, கம்பர் வடமொழியில் பெரும் புலமை வாய்ந்திருந்த சில அந்தணர்களை இரவில் தம்முடன் இருத்திக் கொண்டு, வான்மீகம், போதாயனம் முதலிய இராம சரிதங்களை யெல்லாம் நன்கு ஆராய்ந்து, பகற்போதில் ஒரு நாளைக்கு எழுநூறு செய்யுட்களாகச் சற்றேறக் குறையப் பதினாயிரத்து ஐந்நூறு பாக்களில் ஆறு காண்டங்களையும் பாடி முடித்தார்.

இவ்வண்ணம் இராம சரிதையை இனிய தமிழ்ப் பாக்களான் இயற்றிய கம்பர், சோழன்பாற் சென்று, இராமாயணம் இனிது நிறைவேறி யுள்ளதைக் கூறினர். அந் நற் செய்தியைக் கேள்வியுற்ற சோழன், பேருவகை பூத்துக் கம்பரை முக மலர்ச்சியுடன் நோக்கி, "நல்லிசைப் புலவீர், இராமாயணம் திரு மாலின் திருவவதாரத்தைப் பற்றிக் கூறும் நூலாதலான் அதனைத் திருமாலின் திருப்பதிகள் பலவற்றுள்ளும சிறந்து விளங்கும் திருவரங்கப்

பெரிய கோயிலிலே அரங் கேற்றஞ் செய்தல் அழகிது," என்றார்.

பின்பு, கம்பர் சோழனது விருப்பின்படியே திருவரங்கம் போந்து, ஆண்டிருந்த வைணவர்களைக் கண்டு தம் கருத்தைக் கூறினர். அவ் வைணவர்கள் கம்பரை நோக்கி, "தமிழ்ப் பெரும் புலவீர், நீவிர் தமிழிற் பெரும் புலமை யுடையிர் என்பதிற் சிறிதும் ஐயமின்று. நாங்கள் வடமொழிப் புலவர்கள். உமது இராமாயணத்தின் அழகைக் கண்டு ஆநந்த மடைதற்குரிய ஆற்றல் எங்களுக்கில்லை. சிதம்பரத்தில் தில்லை மூவாயிர தீட்சிதர் என்பார் தமிழிற் பெரும் புலவர்களாக விளங்குகின்றனர். நீர் அவர்கள் மாட்டுச் சென்று, அவர்கள் கை யொப்பத்தைப் பெற்று வருவீரேல், உமக்கும் உமது இராமாயணத்துக்கும் பெரு மதிப்புண்டு," என்றனர்.

உடனே கம்பர், சிதம்பர மென்னும் திருப்பதிக்குச் சென்று, தில்லை மூவாயிர தீட்சிதர்களுள் சிலரைக் கண்டு, தமது கருத்தை வெளியிட்டார். அதனைக் கேட்ட அத் தீட்சிதர்கள், கம்பரை நோக்கி, "உமது கருத்து எளிதில் முடிவதன்று. நாங்கள் மூவாயிர தீட்சிதரும் என்று ஓரிடத்தில் ஒன்றாய்க் கூடுவமோ அன்று தான் உமது கருத்து நிறைவேறும்," என்று கூறிச் சென்றார்கள்.

பின்னர், ஒரு நாள் இரவு கம்பர் இராமாயண அரங்கேற்றம நடைபெறு திருத்தல் பற்றித் திருவரங்க நாதரைத் திரு வுளத்தில் எண்ணி, மனங் கவன்று துயின்றார். அப்பொழுது, அடியவருள்ளக் கமலத்தில் அன்புடன் அமர்ந்துள்ள திருவரங்கர், கம்பரது கனவிற் றோன்றி, "ஐய, நீ ஏன் வருந்துகின்றாய்? நாளைக் காலைத் தில்லை மூவாயிர தீட்சிதர்களில் ஒருவருடைய மகவு பாம்பின் விடத்தால் மரிக்கும். அக்காலை அம் மூவாயிரப்

புலவரும் ஆண்டு வந்து குழுமுவர். அச் சமயம் நீ அவண் சென்று, இராமாயணத்தில் நாக பாசப் படலத்தில் சில பாக்களை யெடுத்துப் பாடுக. உடனே அக் குழந்தை உறங்கி விழிப்பதே போல் உயிர் பெற்றெழும். அவ் வமயம் அத் தில்லை மூவாயிர தீட்சிதரும் உனதாற்றலைக் கண்டு இறும்பூதெய்தி உனது இராமாயணத்திற்குக் கையொப்பம் கொடுப்பர்,'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

கம்பர், பொழுது புலர்ந்த வுடனே, குழந்தையை யிழந்து புலம்பிக் கொண்டிருந்த தீட்சிதரின் இல்லத்தைக் கண்டு பிடித்தார். அவ்விடத்தில் அப்பொழுது தில்லை மூவாயிர தீட்சிதரும் வந்திருந்தனர்.

அவ்வமயம் கம்பர், விடத்தான் இறந்து கிடந்த மகவின் பாங்கர்ச் சென்று, அக் குழந்தைக்காக மனம் வருந்திக் கொண்டிருந்த தில்லை மூவாயிர தீட்சிதரை நோக்கி, ''ஐயன்மீர், நீங்கள் இம் மகவிற்காக மனங் கவலன்மின். யான் எல்லாம் வல்ல இறைவரின் இன்னருளால் இம் மகவை உயிர்ப்பித்துத் தருகின்றேன். யான் அங்ஙனம் செயின், நீங்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து யான் விழைவதைச் செய்ய வல்லிரோ?'' என்று வினவினர். அவ் வற்புத மொழியைக் கேட்ட தீட்சிதரெல்லாம், இழந்த பழம் பொருளைப் பெற்றவறிஞரே போற் கரை கடந்த களிப் பெய்தி, கம்பர் திருமுகத்தை அன்புடன் நோக்கி, ''அறிவும் ஆற்றலும் சான்ற ஐயரே, நீர் எதனை விழைவுறினும் அதனை யாங்கள் உடனே செய்து முடிக்கின்றோம். நீர் எவ்வகையிலேனும் இக் குழந்தையை யுயிர்ப்பித்தருளும்,'' என்று வேண்டிக் கொண்டனர்.

உடனே கம்பர், திருமாலைத் தமது திருவுள்ளத்தில் நினைத்து, தாமியற்றிய இராமாயணத்தில் நாக பாசப் படலத்திலுள்ள,

'பல்லா யிரத்தின் முடியாத பக்க
மவைவீச வந்த படர்கால்
செல்லா நிலத்தி னருளோடு செல்ல
வுடனினை றவாளி சிதறுற்
றெல்லா மவித்து முணர்வோடு மெண்ணி
யறனேவி லைக்கு மூரவோன்
வல்லா னொருத்த னிடையேயப டுத்த
வடுவான மேனி வடுவும்'

'வாசங் கலந்த மரைநாள நூலின்
வகையெனப தென்னை மழையெண்
ருசங் கைகொண்ட கொடைமீளி யண்ணல்
சராமன் வெண்ணெ யணுகும்
தேசங் கலந்த மறைவாணர் செஞ்சொ
லறிவாள ரென்றும் முதலோர்
பாசங் கலந்த பசிபோல கன்ற
பதகன்று றந்த வுரகம்,'

என்னும் பாடல்களைப் பாடிப் பின்னரும்,

*'ஆழியான் பள்ளி யணையே யகன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே—ஊழியான்
பூணே புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற
நாணே யகல நட'

'மங்கை யொருபாகன் மணிமார்பி லாரமே
பொங்கு கடல்கடைந்த பொற்கயிறே—திங்களையுஞ்
சீறியதன் மேலூருந் தெய்வத் திருநாணே
ஏறிய பாம்பே யிறங்கு'

'பாரைச் சுமந்த படவரவே பங்கயக்கண்
வீரன் கிடந்துறங்கு மெல்லணையே—ஈரமதிச்
செஞ்சடையான் பூணுந் திருவா பரணமே
நஞ்சுடையாய் தூர நட,'

*இம்மூன்று வெண்பாக்களும் ஏரெழுபதின் அரங்கேற்றக் காலத்துச் சடையப்ப வள்ளலின் இளவலை யரவந்தீண்ட, அவ்விடந் தீர்தற் பொருட்டுப் பாடப்பட்டவை யென்றும் கூறுப.

என மூன்று வெண்பாக்களைப் பாடி அரவங்களுக்கெல்லாம் அதிபனுய் விளங்கும் ஆதிசேடனை அகமுற வுன்னினுர்.

அதகாலே ஆண்டிருந்த புற்றினின்று மோர் அரவம் வெளிப்போந்து இறந்து கிடந்த மகவை யண்மித் தான் முன்பு கடித்த விடத்திலேயே மறுபடியும் கடித்துத் தலைக்கேறி யிருந்த விடத்தை மீட்டுக்கொண்டு சிறிது தூரஞ் சென்று இறந்துபட்டது. மாண்ட மகவு உறங்கி யெழும் குழந்தையைப் போல் கால்களை யுதறிக் கண் களைத் திறந்து பார்த்தது.

ஆண்டுக் குழுமியிருந்த தில்லை மூவாயிர தீட்சிதரும் கம்பரது அற்புதச் செயலைக் கண்டு, அப்பேரறிஞர்பால் பேரன்பு கொண்டு, அப் புலவர் இயற்றிய இராமாயணத் தைப் பன்முறை ஆழ்ந்தாழ்ந்து வாசித்து, அந் நன்னூலிற் செறிந்துள்ள பேரழகுகளைக் கண்டு பெரு வியப் பெய்தி னர். பின்னர், அவ் வந்தணர் கம்பரை நோக்கி, அவ் விழுமிய இராமாயணத்தில் பற்பல கடாக்களை விடுத்த னர். கம்பர் அந்தணர் விடுத்த வினுக்களுக்கு நேரிய விடை யளித்து அம் மறையவர் மனத்தை மகிழ்வித்தனர்.

பின்பு, தில்லை மூவாயிர தீட்சிதரும் கம்ப இராமா யணத்தைச் சீரிய காப்பியமென மதித்துத் தமது கை யொப்பத்தை யன்புடன் அளித்துக் கம்பர்க்கு மிக்க பெருமை கொடுத்தனர்.

கம்பர், தில்லை மூவாயிர தீட்சிதரது கையொப்பத் தைப் பெற்றுத் திருவரங்கம் போந்து, ஆண்டிருந்த வைணவர்கட்கு அக் கையொப்பத்தைக் காட்டினர். பின் னர், அவ்வைணவர் கம்பரைப் பற்பல புலவர்களிடம் அனுப்பினர். கம்பர், அவ்வைணவரின் மனக்கோட்படி யே அவர்கள் குறிப்பிட்ட புலவர்கள்பால் நண்ணி, அப் புலவர்களின் மனத்தைத் தம் கல்விப் பெருக்கால் மகிழ் வித்து, அவர்கள் அன்புடன் அளித்த கையொப்பத்தைப்

பெற்று வந்தனர். பின்னர்த் திருவரங்க நாதர் முன்னிலையில் நாதமுனிகள் முதலிய பல பல பெரியோரெல்லாம் இராமாயண இரசத்தைக் காதாற் பருகிக் களி கூரும் வண்ணம் கல்விக் கடலெனத் திகழும கமபர் தமது இராமாயணத்தை அரங்கேற்றஞ் செய்தனர்.

சோழன், கம்பரையும் ஒட்டக் கூததரையும் இராமாயணம் பாடும்படி கட்டளை யிட்டான் என்பதையும், துமியென்னும் பதத்தைப் பற்றிக் கம்பர்க்கும் ஒட்டக் கூத்தர்க்கும் வாதம் நேர்ந்தது என்பதையும் ஒட்டக் கூத்தர் தாம் மிக வருந்திப் பாடிய இராமாயணத்தின் பெரும் பாகத்தைக் கிழித்தெறிந்தனர் என்பதையும் திருவாளர் சி. கு. நாராயணசாமி முதலியார் தாமியற்றிய தமிழ்ப் புலவர் வரலாற்றில் யுக்திக்குப் பொருந்தும் வண்ணம் அழகு பட மறுத்துள்ளதைக் கீழே கண்டு தெளிக :—

" அரசன் அக் காவியத்தை (இராமாயணத்தை) விரைவிற் பாடி முடிக்கக் கம்பரையும் ஒட்டக் கூத்தரையும் நியமித்தானாயின், அதனைப் பப்பாதியாகப் பகிர்ந்து தநது, கநத புராணச் சப்த காண்டங்களையும் கச்சியப்ப சிவாசாரியருங் கோனேரியப்ப நாவலரும், காஞ்சிப் புராண வுபய காண்டங்களையுஞ் சிவஞான சுவாமிகளுங் கச்சியப்ப முனிவரும் பகிர்நது கொண்டு பாடியது போலப் பாடச்செய்தல் விதி. அவ்வாறின்றித் தனித் தனிப் பாடச் செய்தான் என்பதற்குக் காரணம் யாது ?

கம்பர் தாம் பேசிய பொய்க்கிணங்கப் பாடி வந்த சேதுபந்தனப் படலததிேனார் பாட்டில் துளி யென்னும் பதத்திற்கு ஆகு பெயராய்த் துமி யெனப் பிரயோகித் திருப்பதில் கூத்தர் ஐயங்கொண்டு ஆக்ஷேபித்தனர் என்றால், இத்தகைய பிரயோகங்கள் பல இலக்கிய நூல்களில் எதுகையின் கண்ணும், மோனையின் கண்ணும், இன்னும் பல சீரின்கண்ணும் எத்தனையோ கண்டும் தாமே கை

யாடியு மிருக்கு மிவருக்கு அதிற் சந்தேகம் வந்தது மிக வாச்சரியமே! அன்றியும், இத்தகைய விகற்பங்கள் தாமோதியுள்ள சிந்தாமணி முதலிய காவியங்களிலேயே செப்பரிதா யுள்ளன. இவைகட்கு விதியோ வெல்லா விலக்கண நூல்களினும் எண்ணிலவா யுள. இத்தகைய ஓர் அற்ப கார்யார்த்தமாய்க் கலைமகள் ஓரிடைச்சியாக இடையர் சேரியின்கண் எழுந்தருளி அச சந்தேகத்தினைத் தீர்த்தது அதனிலும் மிக ஆச்சரியமே! இத் தமிழ் நாட்டின் கண்ணுள்ள இலக்கிய நூல்களில் இத்தகைய பிரயோகங்களுக் கெல்லாம் கலைமகள் வந்துதான் கண் திறக்க வேண்டும் போலும்!

கம்பரைத் தேவ அருளாற் பாடும் வரகவி யெனக் கருதி யஞ்சிக் கூத்தர் தாம் பாடிய இராமாயணத்தைக் கிழித்தெறிந்தனர் என்றால், இப் புவியில் இதுகாறும் எத்தனையோ வரகவிகள் இருந்து பாடிய பாக்களைக் கண்டு பயந்து எத்தனை பேர் எத்தனைப் பிரபந்தங்களைக் கிழித்தெறிந்தார்கள்? இடையில் வெறிபிடிக்கப்பட்ட வித்துவான்களுங் கூடத் தாங்கள் பாடிய பாக்களைக் கிழித்தெறிய மனங் கொள்ளார்களே! அப்படி யவர் உண்மையாகக் கடல்காண் படலம் வரையிற் பாடி யிருந்து கம்பர் அதற்குமேல் சேது பந்தனப் படலம் வரையிற் பாடியுள்ளேன் எனப் பொய் சொல்லிப் பின்னர்ப் பாடி வந்த அப்படலத்தில் தாம் துமி யென்பதற்குப் பொருள் தெரியாது மயங்கி, அது முன்னிலையிற் கம்பர் கலைவாணியின் அருள் பெற்ற வரகவி யெனத் தெரிந்து கொண்டாரேல், அப்போதே யன்றோ தாம் பாடிய வரையிற் கிழித்தெறிதல் வேண்டும். அப்பால் ஆறுமாதம் வரையிற் கஷ்டப்பட்டு முன்பாடிய ஐந்து காண்டச் செய்யுள்களைக் கொள்ளற் பாலன வாகிய மற்றை யிரண்டு காண்டங்களையும் ஏனவர் வீணே பாடல் வேண்டும்?

கம்பரது கவிக்கெதிரே தமது கவி கவின் செய்ய மாட்டாதெனக் கிழித்தெறியத் தலைப்பட்ட கூத்தர், "நான் ஆறு காண்டமே பாடி யேழாவதற்கிதனை வைத்துக் கொள்ளுகிறேன்," என அவ்வுத்தர காண்டத்தைக் கம்பர் கேட்ட போது அப்படியே செய்யுமென்று கூறிக் கொடுத்தா ரெனல் பொருந்தாது. தமது கவி அவர் கவிக்கு முன் தாழ்ந்து போமென்றுள்ளினவர் அதில் ஒரு கவியேனுங் கொடுப்பச் சம்மதிப்பரோ? உடனே கிழித்தெறிந்தனவற்றையும் பொறுக்கிச் சேர்த்து அவர்கள் முன்னர்த் தாமே நெருப்பிலிட்டுத் தீய்த்திடுவரன்றோ? அந்தோ! இவைகள் எல்லாம் அறிவின் மிக்கார் யோசிக்குமிடத்து நம்பத்தக்கனவாமா?"

# ஐந்தாம் இயல்

## கம்பர் சோழனை வெறுத்துச் செல்லல்

கம்பரது கல்விப் பெருக்கைக் கேள்வியுற்ற சோழன் அந் நல்லிசைப் புலவரைத் தன்பால் அழைப்பித்து அவரது கரை கடந்த கல்வித் திறனைக் கண்டு மனம் மகிழும் வண்ணம் அவர்க்குப் பல வரிசைகள் அளித்துக் கவிச் சக்கிரவர்த்தி யெனப் பட்டமும் தந்தான்.

பின்னரும் சோழன் கம்பர்க்கு நாடொன்று நல்கி, அந் நாட்டிற்குக் கம்ப நாடு எனப் பெயருங் கொடுத்தனன் என்று சில அறிஞர் கூறுகின்றனர்.

கம்பர், அக்காலத்தில் கரை கடந்து பொங்கி வந்த காவிரி நதியின் பெருக்கடங்கும் பொருட்டு ஒரு செய்யுள் பாடித் தம் தெய்வ வாக்கின் பெருமையைப் பலர்க்கும் புலப்படுத்தினர் என்பது,

'கன்னி யழிந்தனள் கங்கை திறம்பினள்
பொன்னி கரையழிந்து போனாளென்—றிந்நீர்
உரைகிடக்க லாமோ வுலகுடைய தாயே
கரைகடக்க லாகாது காண்,'

எனத் தமிழ் நாவலர் சரிதையில் காணப்படும் வெண்பா வால் நமக்குத் தெரிகின்றது.

கம்பர் சோழன்மேல் சினந்து அவன் பதியை விட்ட கன்ற போது,

'காத மிருபத்து நான்கொழியக் காசினியை
ஓதக் கடல்கொண் டொளித்ததோ—மாதவா
கொல்லி மலையுடைய கொற்றவா நீமுனிந்தால்
இல்லையோ வெங்கட் கிடம்,'

எனக் கூறிச் சென்றாரெனத் தெரிதலால், சோழன் கம்பரை முனிந்திருக்க வேண்டுமென நாம் எண்ணுதற்கு இடன் உளது.

அங்ஙனம் சோழன் கம்பரை முனிந்ததற்குரிய காரணம், கம்பர், செல்வத்திலும் புகழிலும் சிறந்து விளங்கிய சடையப்ப வள்ளலாரைத் தாமியற்றிய சீரிய இராமாயணக் காப்பியத் திடையிடையே புகழ்ந்திருத்தலே யாம்.

சோழன் சடையப்ப வள்ளலார் மீது அழுக்காறு கொண்டதன் காரணத்தைக் கீழே காண்க:—

ஓரமயம் சடையப்ப வள்ளலார் சோழனது அவைக் களத்தே வீற்றிருந்தபோது, வணிகன் ஒருவன் கடற் பட்ட ஒள்ளிய சில முத்துக்களுடன் ஆண்டுப் போந்து, சோழ மன்னன் முன்னர் அம் முத்துக்களை வைத்து வணங்கி, "மாநிலம் புரக்கு மன்னரே, இம் முத்துக்கள் பல்லுலகு புரக்கும் உம்மை யொத்த பார்த்திபர்க்கே யுரிய," என்று கூறி யொரு புடை நின்றான்.

அக்காலை, சோழன் கடற்படு முத்தைச் சிறப்பித்துக் கூறி, வணிகன் கொணர்ந்த முத்துக்களைச் சடையப்ப

வள்ளலார்க்குக் காட்டினன். அவ்வமயம் சடையப்ப வள்ளலார், கடற்படு முத்தினும் கழனி படு முத்துக்களே பருமையினும் ஒளியினும் சிறந்து விளங்குவன என்பதைச் சோழ மன்னற் கெடுத்துரைத்தார்.

வள்ளலாரது வாய்மொழி கேட்ட சோழன் பெரு வியப்புற்று, சடையப்ப வள்ளலாரைப் புன்முறுவலுடன் நோக்கி, "செல்வரே, நீர் கூறும் கூற்று எற்குப் பேராச் சரியத்தைத் தருகின்றது. நாட்டிற்கு நலனை விளைக்கும் கழனிகளில் முத்துக்கள் படுகின்றன என யான் கேள்வி யுற்றிருக்கின்றேன். ஆனால் இத்தகைய ஒள்ளிய முத்துக்களை யான் இதுகாறும் கழனியிற் கண்டிலேன்," எனக் கூறினன்.

உடனே சடையப்ப வள்ளலார், "புரவலரே, பழனத்திற் படு முத்துக்களை நீர் காண்டல் அரிதே. யான் அவற்றினை யிப்பொழுதே நமக்குக் காட்டுவன்," எனப் புகன்று சென்று, தமது கழனியில் கமுகுபோல் பருத்து வளர்ந்திருந்த கரும்புகள் பலவற்றுள் சிலவற்றை யரசனிடம் கொணர்ந்து, அச் சில கரும்புள்ளும் ஒரு கோணற் கரும்பை யெடுத்து, அதன் கணு ஒன்றை முறித்தார். அப்பொழுது அக் கணுவிலிருந்து தெறித்த பல முத்துக்கள் வணிகன் கொணர்ந்த கடற் படு முத்தினும் ஒளியிற் சிறந்து சோழனுடைய கண்ணையும் மனத்தையும் ஒருங்கே கவர்ந்தன. அப்பொழுது சடையப்ப வள்ளலார் சோழனை நோக்கி, "மன்னரே, எம் நாட்டுக் கழனி யொன்றில் வளர்ந்துள்ள பல்லாயிரக் கரும்புகளுள் இக் கரும்பு மிக இழிந்தது. ஆதலால், மற்றைக் கழனிகளில் வளர்ந் தோங்கியுள்ள மிகச் சிறிய கரும்புகள் எண்ணிறந்தன," எனத் தந் நாட்டுக் கழனிகளின் சிறப்பையும் அவற்றிற் செழித் தோங்கி வளர்ந்துள்ள கமுகை யொத்த கரும்பு களின் சிறப்பையும் அக் கரும்புகளுக்குள் திகழாநிற்கும்

விலையுயர்ந்த முத்துக்களின் சிறப்பையும் குறிப்பான் உணர்த்தினார்.

அவ்வமயம் சோழனது அவைக் களத் திருந்தோ ரெல்லாம், 'சடையன் கழனி படுவ கடல்படா,' என்று சடையப்ப வள்ளலாரின் கழனி வளத்தைப் பற்றிப் புகழ்ந் தனர். அக்காலை, சோழன் சடையப்ப வள்ளலாரின் செல்வப் பெருக்கையும் அவரது பெருமிதத்தையுங் கண்டு அழுக்காறு கொண்டான்.

சோழனுக்குச் சடையப்ப வள்ளலார்பால் அழுக் காறுண்டாயதற்குக் கீழ்வரும் வேறொரு காரணத்தையுங் கழறுகின்றனர் :—

ஒரு நாள் வட நாட்டு வணிகன் ஒருவன் பெருவிலைப் பட்டு ஒன்றைக் கொணர்ந்து சோழ மன்னனுக்குக் காட்டி அதன் விலையையும் பகர்ந்தான். அப்பொழுது சோழன் தனது பெரு நிதி யறைக்கண்ணுள்ள பொன்னளவின் வணிகன் கொணர்ந்த பட்டின் விலை பன்மடங் கதிகரித் திருத்தலைக் கண்டு மனந்தளர்ந்து வாளா விருந்தான்.

சோழனது மனக்குறிப்பை யுணர்ந்த வணிகன், அம் மன்னன்பால் விடை பெற்று வெளிப் போந்து, தான் கொணர்ந்துள்ள விலையுயர்ந்த பட்டாடையை விலைக்குப் பெற்றுக் கொள்ளும் நிலையில் உள்ள செல்வர் யாரெனப் பலரை வினவினான். பின்னர், அப் பட்டை விலைக்குப் பெறுதற் குரியவர் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலார் ஒருவரே என்பதை அவ் வணிகன் உணர்ந்து அச் செல்வர்பால் நண்ணித் தான் கொணர்ந்த பட்டை அவர்க்குக் காட்டி அதன் விலையையுங் கூறினான்.

பட்டாடையின் விலையைக் கேட்ட சடையப்ப வள்ள லார், வணிகனை நோக்கி, "ஐய, இதன் விலை இவ்வளவு தானோ?" என வினவி, அவ்விலையை ஒரு பொருளாக

மதியாது அவ்வணிகனுக்குக் கொடுத்தனுப்பினார். அச் செய்தி யுணர்ந்த சோழன் பெரு வியப்புற்றுச் சடையப்ப வள்ளலாரைக் காண விரும்பினான். அக்காலை வள்ளலார்க் குத் தொடையில் ஒரு சிலந்தி கண்டிருந்தமையால், அச் செல்வர் அப்பொழுது சோழன்மாட் டணுகுதற்கு இயல வில்லை.

சில நாட்குப் பின்னர்ச் சடையப்ப வள்ளலார் தாம் பெரு விலை கொடுத்து வட நாட்டு வணிகனிடமிருந்து பெற்ற பட்டாடை யணிந்து சோழன்பாற் சென்றார். சோழ மன்னன் சடையப்ப வள்ளலார்க்குத் தக்க மரி யாதைகளைச் செய்த பின்னர், அவரை நோக்கி, "செல் வரே, உமது கவானிற் கண்ட சிலந்தி குணமாய் விட்ட தா? அதனைக் காண்பியும்" என்றார்.

சடையப்ப வள்ளலார் கூரிய அறிவுடையவராதலான், ஆடையை நீக்கிக் கவானை அரசற்குக் காட்டல் அழகி தன்றெனக் கருதி, அவ்வமயம் தாம் அணிந்திருந்த அரிய பட்டாடையைச் சிலந்தி யிருந்த இடத்திற் கிழித்துச் சிலந்தியைச் சோழற்குக் காட்டினார்.

அப்பொழுது சோழன் சடையப்ப வள்ளலார்க்குச் செல்வப் பெருக்கால் உண்டாய மனத்திடனைக் கண்டு வியப்பும் அழுக்காறும் கொண்டான்.

மற்றொரு நாள் வேறொரு வணிகன் மிக்க பொருட் செலவு செய்து வருடங்கள் பல கழியினும் தனது தூய்மை யினும் நறுமணத்தினும் சிறிதும் குறைவுறாத கலவைச் சாந்தை யரசர்க் கெனவே கூட்டி யதனை யொரு வண்டியி லிட்டுச் சோழனிடம் போந்து, அந் நறுஞ் சாந்தின் நலனை யெல்லாம் நன்கெடுத்துக் கூறி யதன் பெரு விலையினை யும் பகர்ந்தான். அப்பொழுது சோழன் அச் சாந்திற் குரிய விலை கொடுத்து அதனைப் பெறுதற்கு முடியாமல்

மனங் கவன்றான். பின்னர், சடையப்ப வள்ளலார் அச் சாந்தினை அவ் வணிகனிடமிருந்து விலைக்குப் பெற்றுத் தம்முடைய கணக்கற்ற கழனிகளில் சில கழனியின் சேற்றுடன் அந் நறுஞ் சாந்தைக் கலக்கினார். அதனை யுணர்ந்த சோழன் சடையப்ப வள்ளலாரிடம் அழுக்காறு கொண்டான்.

இவ்வண்ணம் சடையப்ப வள்ளலார்பால் அழுக்காறு கொண்டிருந்த சோழ மன்னனுடன் கம்பர் முரண்கொண்டு அம்மன்னன் பதியின் நீங்கிப் பாண்டி நாடு சென்று மதுரையம் பதியிற் புகுந்தார். கம்பர் வரவை யுணர்ந்த பாண்டியன் களிப்பென்னுங் கடலுள் ஆழ்ந்து தன் மனைவியுடன் எதிர் சென்று, அப் புலவர் பெருந்தகையாரது சிவிகையைத் தாங்கினான்.

அப்பொழுது கம்பர்,

'உமையவளுந் நீயு மொருங்கொப்பை யொப்பை
உமையவளுக் குண்டங்கோ ரூனம்—உமையவடன்
பாகந்தோய்ந் தாண்டான் பலிக்குழன்றான் பாண்டியனின்
பாகந்தோய்ந் தாண்டான் பதி,'

என வொரு வெண்பா பாடிப் பாண்டியன் வாழ்க்கைத் துணைவியைப் புகழ்ந்தார்.

பின்னர், கம்பர் பாண்டியனுடன் சென்று அவனது அவைக் களத்தே சின்னாள் சிறக்க வீற்றிருந்தனர். பாண்டியன் கம்பரது கல்வித் திறனை நாடோறுங் கண்டு கழிபேருவகை பூத்து வந்தான்.

கல்வியிற் பெரிய கம்பரை யிழந்த சோழனது அவைக்களம் தாமரை யிழந்த தடமெனவும் இந்துவை யிழந்த இரு விசும் பெனவும், கணவனை யிழந்த காரிகை யெனவும் பொலி விழந்திருந்தது. அந் நிலையைக் கண்ணுற்ற சோழன் அளப்பருந் துன்புற்றுத் தனது மட

மையை யுன்னிப் பெரிதும் கவன்று, கம்பரை எவ்வகையி லேனும் அழைத்து வரும் வண்ணம் இணையார மார்பனை மதுரையம் பதிக்கு அனுப்பினன்.

இணையார மார்பன் காலினுங் கடுகிச் சென்று கம்பரைக் கண்டான். கம்பர் இணையார மார்பனைக் கண்டு பெருங்களிப்புக் கொண்டு, பாண்டியன்பால் அழைத்துச் சென்றார். பாண்டியன் இருவரையும் ஈராதனத்திருத்தி, கம்பரை நோக்கி, "தமிழ்ப் பெரும் புலவீர், இத்திருவுடையார் யார்?" என வினவினன். அக்காலை, கம்பர்,

'என்னுடைய தம்பி சராமனுசகிளையான்
கன்னன் மதயானைக் கண்டனமகன—முன்னங்
கணையாழி முத்துதிர்க்குங் காவிரிசூழ் சோணாட்
டிணையார மார்ப னிவன்,

என இணையார மார்பனுக்கும் தமக்குமுள்ள சம்பந்தத்தையும் ஏனையவற்றையும் நன்கெடுத்துக் கூறினார்.

பின்னர், சோழ மன்னனால் அனுப்பப் பெற்ற இணையார மார்பன் தான் வந்த காரியத்தைப் பாண்டியற்கும் கம்பர்க்கு மெடுத்துக் கூறிச் சோழன் கம்பரின்மையால் படுந்துயரையும் எடுத்துரைத்தான். கம்பர் இணையார மார்பனுடன் சோழன்பாற் செல்லத் தீர்மானித்திருக்கையில், ஒரு நாள் பாண்டியன் தனது மதுரையம்பதியே எல்லா நகரினும் சீரிய தென்பதைக் கம்பர்க்குக் காட்டுவான் விழைந்து, அத் திருப்பதியைப் பல் வகையான் அலங்கரித்துக் கம்பர்க்கு அப் பதியின் சிறப்பை யெல்லாங் காட்டி, கம்பரை நோக்கி, "செந்தமிழ்ப் புலவீர், மதுரையம்பதியின் மாபெரு வளத்தினைக் காணுதிர்," என்றான்.

பாண்டியன் மனக்கோளுணர்ந்த கம்பர், அம்மன்னன் செருக்கை யடக்கக் கருதி, அக் காவலனைப் பார்த்துப் புன்

முறுவல் செய்து, "இரு நிலம் புரக்கும் இறைவரே, இப் பதியின் சிறப்புத் திரு வெண்ணெய் நல்லூரினுள்ள இடு காட்டின் சிறப்பை யொக்கும்," என்றார்.

கம்பர் வாய் மொழியைக் கேட்ட பாண்டியன் இறும்பூ துற்று, அத்தகைய வள நகரைக் கண்ணுற் கண்டு களிக்கக் கருதிக் கம்பருடனும் இணையார மார்பனுடனும் திருவெண்ணெய் நல்லூர்க்குப் புறப்பட்டான்.

பாண்டியன் திருவெண்ணெய் நல்லூரை யடைதற்கு முன்னரே, சடையப்ப வள்ளலார், பாண்டியற்கும் கம்பர்க்கு மிடையே நிகழ்ந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் உணர்ந்து, தம் பதியைப் பொன்னுலகினும் பொலிவுறச் செய்தார்.

பாண்டியன் கம்பருடன் திருவெண்ணெய் நல்லூர்ப் போந்து அந் நகரின் சிறப்பினைக் கண்டு, கம்பர் கூறியது உண்மை யென வெண்ணித் தன்னகர் மீண்டான். இந்

'விள்ளு மதுரை யலங்கரித்த வீம்பு
ருள்ளு மிடுகா டொக்குமென வுரைத்தான்
கம்ப னுரைத்தமுறை
யள்ளு மணியாற் பசும்பொனணு லமரர்
பதிபோ லலங்கரித்தே
வள்ளல் வழுதி யதிசயிப்ப வாழ்ந்தோன்
சோழ மண்டலமே,'

என வருஞ் செய்யுள் வலியுறுத்துகின்றது.

பின்னர், கம்பர் இணையார மார்பனுடன் சோழன் பாற் சென்றார். கம்பர் திரு முகத்தைக் கண்ட சோழன் அளவிலா வானந்த முற்று, அப் புலவர்க்குச் சிறப்புகள் பல செய்து தனது அவைக் களத்தே அப்பேரறிவாளரைச் சிறப்புற விருக்கச் செய்தான்.

# ஆறும் இயல்

## கம்பர் இரண்டா முறை சோழனை விட்டகலல்

கம்பர் இரண்டாமுறை சோழனுடன் வெகுண்டு, அம் மன்னவன் பதியை விட்டகன்ற பொழுது,

‘மன்னவனு நீயேயோ மண்ணுலகு மிவ்வளவோ
உன்னையோ நான்புகழ்ந்திங் கோதுவதும்—என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ சோழா
குரங்கேற்றுக் கொள்ளாதோ கொம்பு,’

என்னும் வெண்பாவைப் பாடிவிட்டகன்றனர் எனத் தெரிகின்றது. அவ்வண்ணம் கம்பர் சோழனை வெறுத்துச் சென்றதற்குப் பலர் பல காரணங்களைக் கூறுகின்றனர். அவற்றுள் முக்கியமான சில காரணங்களைக் கீழே காண்க:—

கம்பர்க்கு அம்பிகாபதி யென்னும் அரும்பெயர் பூண்ட அருமந்தப் புதல்வன் ஒருவன் இருந்தான். அம் மைந்தன், கல்வி, அறிவு, அழகு முதலியவற்றில் சிறந்து விளங்கினான்.

சோழன் திருமகள் அம்பிகாபதியைக் காதலித்துக் களவொழுக்கத்தை மேற்கொண்டு அவ் வெழிலுடைக் குமரனுடன் களிப்புற்று வந்தாள். அஃதுணர்ந்த சோழன் அம்பிகாபதியை ஒறுக்க அற்றம் பார்த்திருந்தான்.

ஒரு நாள், சோழன் அம்பிகாபதியைத் தனதவைக்கு வரவழைத்து, அக் குரிசிலை நோக்கி, “ஐய, யான் இன்று நின் ஆற்றலைப் பார்க்கப் பெரிதும் விழைகின்றேன். ஆதலான், நீ, சிற்றின்பங் கலவாது பேரின்பமே பொருந்திய நூறு செய்யுட்களை யியற்ற வல்லையோ? கூறுதி. ஆனல் அந் நூறு பாக்களுள் ஒன்றேனும் சிற்றின்பம் பொருந்திய

தாயிருப்பின், நின் தலை என் வாளுக் கிரையாம்,' எனக் கூற,

அம்பிகாபதி சோழன் கூறிய நிபந்தனைக் கிசைந்து செய்யுள் பாடத் தொடங்கினான். சோழனுடைய செல்வப் புதல்வி தன் காதலற்கு யாது நேரிடுமோ வென மாளிகை யின் மேல் நிலையில் மனங் கவன்றிருந்தாள். சிறிது நேரஞ் சென்ற பின்னர், அம் மங்கைக்கு ஊழின் பெரு வலியால் அம்பிகாபதியைக் காணவேண்டு மென்ற பேரவா எழும்பியது. உடனே அம் மடவரல் தன் அருமைக் காதலனைக் காண்பான் மாளிகையின் மேல் நிலையில் நின்ற வண்ணமே தன் சென்னியை ஒரு புறம் நீட்டினள்.

அம்பிகாபதி தன் ஆருயிரனைய காதலியின் அழகிய வதனத்தைக் கண்டவுடனே அனைத்தையு மறந்து, பேரா கூழின் வன்மைக்குட்பட்டு,

'சற்றே சரிந்த குழலே துவளத் தரளவடந்
துற்றே யசையக் குழையூச லாடத் துவர்கொள் செவ்வாய்
நற்றே னொழுக நடனசிங் கார நடையுடையாள்
பொட்டே ரிருக்குந் தலையலங் காரம் புறப்பட்டதே,'

என்னுஞ் சிற்றின்பம் விரவிய செய்யுள் ஒன்று பாடினான். உடனே சோழன் தனதெண்ணம் கைகூடிற்றெனக் களித்துத் தான் முற்கூறிய நிபந்தனையின் வண்ணம் அம்பிகாபதியின் அருஞ் சென்னியை வெட்டுவித்தான்.

அம்பிகாபதி வாளான் கொலையுண்ட செய்தியை யுணர்ந்த கம்பர், புத்திரச் சோகத்தால் விரைந்தோடி வந்து, இறந்து கிடந்த மகனைக் கண்டு, அளப்பருந் துயருழந்து,

'மட்டுப் படாக்கொங்கை மானார் கலவி மயக்கத்திலே
கட்டுப்பட் டாயெனன காதல்பெற் றாய்மதன் கையம்பினால்
பட்டுப்பட் டாயினுந் தேறுவை யேயென்று பார்த்திருந்தேன்
வெட்டுப்பட் டாய்மக னேதலை நாளின் விதிப்படியே,'

'பரப்போத ஞால மொருதம்பி யாளப் பனிமதியந்
தரப்போ னொருதம்பி பினவரத் தானுந் துணைவியுடன்
வரப்போன மைந்தற்குத் தாதை பொறுதுயிர் மாய்ந்தனனெஞ்
சுரப்போ வெனகிங் கினியா ருவமை யுரைப்பதற்கே,'

எனக் கோவெனக் கதறி யழுதார். பின்னர், கம்பர் தம் அருமந்த மகற்குச் செய்ய வேண்டிய கருமங்கள் யாவற்றையுஞ் செவ்வனஞ் செய்து விட்டுச் சோழனை விட்டகன்றார்.

கம்பர் சோழனை விட்டகன்றதற்கு அவர் குலத்தினர்க்குள் வழங்கிவரும் கன்ன பரம்பரைச் செய்தியொன்றைக் கீழே காண்க :—

கல்வியிற் பெரிய கமபர்க்குக் காவேரி யென்னும் பெயரிய கற்புடைப் பெண் ஒருத்தி யிருந்தாள். அக்காரிகை அழகில் திருமகளையும் அருளில் மலைமகளையும் அறிவில் கலைமகளையும் ஒத்திருந்தாள். அப்பேரழகியைக் கண்ட சோழனுடைய புதல்வன் மாரனால் வெல்லப்பெற்று அம் மங்கையின் கற்பை யழிக்கப் பல்லாற்ருன் முயன்ருன்.

அரசிளங் குமரனது ஆண்மையில் வினையை யுணர்ந்த காவேரி யென்னுங் கற்பரசி, 'மகளிர் கற்பென்னுங் கலனை யிழந்து உயிர் பெற்றிருத்தலின், இறத்தல் இனிது," என்றுன்னி, ஒருநாள் நள்ளிரவில் தன் இல்லத்தின் முற்றத்தொருபுறம் கம்பு நிறையப் பெய்யப் பெற்று மிகவும் ஆழ்ந்தோங்கி யிருந்த கம்பங் குழியில் இறங்கி உயிர் நீத்தாள்.

கம்பர் தம் அருங் குமரியின் அகால மரணத்தை யுள்ளி யுள்ளி யாற்ரெருணுத் துன்புற்ருர். பின்னர், அப்புலவர் பெருமானுர், 'இந் நாட்டில் இத்தகைய தீவினை நிகழ்தற்கு மன்னன் தான் காரணம். அரசன் அறநெறியில் ஒழுகின், அவனது நாட்டில் அனைத்தும் இனிது,

நடைபெறும்,' என்றெண்ணிச் சோணாட்டை விட்டகன்றார். இன்னும் காவேரி யென்னும் பெயரிய அக் கற்பரசியைக் கம்பர் குலத்தினர் தம் குல தெய்வமாகக் கொண்டாடி வருகின்றனர் என்பர் சிலர்.

இவ்வண்ணஞ் சோணாட்டை வெறுத்துச் சென்ற கம்பர், ஐதராப் பாத்துக்கு வடகிழக்கே யுள்ள ஓரங்கல் நாட்டுப் பிரதாபருத்திரன் என்னும் மன்னன்பாற் செல்ல நினைந்து, சென்ற வழியிலிருந்த நென்மலி யென்னும் ஊரில் தங்கி அவணிருந்த தச்சன் ஒருவனைப் புகழ்ந்து பாடினர். அத் தச்சன் கம்பரது கவித்திறனைக் கண்டு, பெருங் களிப்புற்று ஆயிரக்கல நெல் ஈந்தான். பின்னர், கம்பர், பன்னாடு கடந்து தொண்டை நாடு புக்கு, ஆண்டு வதிந்திருந்த ஒரு வறிஞன் அகத்தை யண்மினர். அவ்வகமுடையான் கம்பரைக் கண்டவுடன் களிப்பென்னுங் கடலுள் ஆழ்ந்து, அப் புலவர்க்குப் பல்வகைச் சிறப்புக்களைச் செய்து, நல்லுணா வில்லாமையால் மாவையே நீரிற் கரைத்து அப்பேரறிஞர் முன்னர் வைத்தான். அவ்வறிஞனது உள்ளன்பை யுணர்ந்த கம்பர், அவ்வன்பன் அளித்த வுணவு தேவாமுதத்தின் உயரியதென மதித்துத் தம் அகடார வுண்டு அகங் குளிர்ந்தார்.

பின்னர், கம்பர், ஓரங்கல் நாட்டுப் பிரதாப ருத்திரன் பாற் சென்று, அம்மன்னனால் பெரிதும் ஆதரிக்கப் பெற்றார். பிரதாப ருத்திரன் கம்பரது கல்விப் பெருக்கினைக் கண்டு நாடோறும் கல்விக் கருங்கடலில் ஆழ்ந்து திளைத்து வந்தான்.

பன்னாட்குப் பின்னர், கம்பர் தமது பேராற்றலைச் சோழற்குக் காட்டுவான் விழைந்து, தமக்கு அடப்பை கட்டிக்கொண்டு வரும்படி பிரதாபருத்திரனை வேண்டினர். அம்மன்னன், 'புலவர் மலரவனில் மாண்புடையோர்,' எனவழங்கும் பேரறிஞர் கூற்றை யுணர்ந்த

முதலான், அப்பணிக்கு உடனே மனமிசைந்து,
ம்பர்க்கு முடியுடை யரசருக்குரிய வரிசைகளனைத்தும்
ழங்கித் தானும் அவருக்கு அடப்பைக்காரனுகி, அப்
லவரோடு சோணுடு போந்து, சோழனது அவைக்
ளத்து அச் சீரிய புலவரை முன்னினும் சிறப்புற இருத்
தித் தன்னகர் திரும்பினன்.

# ஏழாம் இயல்

## கம்பரது இறுதி நிலை

கல்வி யென்னுங் கருந்தனத்தால் கவின் பெற்
றொளிர்ந்த கம்பர், உலகெலாம் புகழும் உயரிய இராமா
யணத்தை இயற்றியதுடன் வன்னியர்களின் சிறப்பை
விளக்கிக் காட்டும் சிலை யெழுபது என்னும் நூலையும்,
வேளாளரின் சீரிய குணங்களை யெல்லாம் சிறக்கக் கூறும்
ஏரெழுபது என்னும் நூலையும் இன்னும் சிற்சில சிறு
நூற்களையும் இயற்றியுள்ளார் என்பது தெரிகின்றது.

கம்பர், பிரதாபருத்திரன்பாற் சென்று, அம் முடி
யுடை மன்னனைத் தம் கல்விப் பெருக்கால் தமக்கு
அடைப்பக்காரனுக்கிச் சோழனது அவைக்களம் புக்க
நாள் முதல் சோழன் கம்பர்பால் அழுக்காறு கொண்டு,
அப் பெரும் புலவர் நெடு நாள் உயிர் வாழ்ந்திருப்பின்
தனக்குப் பல இன்னல் நேரிடக் கூடுமென எண்ணி
அவரது இன்னுயிரைப் போக்குதற்குரிய வழியை நாடி
வந்தான்.

ஒரு நாள் சோழன், கம்பர் அரண்மனைக்கு வரும்
அற்றம் அறிந்து, அப் புலவர் வரும் வாயிலில் கூட்டில்
அடைக்கப் பெற்றிருந்த ஒரு பெரும் புலியை அக் கூட்

டின் புறத்தே விட்டிருந்தான். அவ்வமயம் களங்க மற்ற மனமுடைய கம்பர் அவ்வழிப் போந்தார். கம்பரைக் கண்ட வுடனே சோழன் ஏவிய புலி வான் முருக்கிக் கண் சிவக்க வெகுண்டெழுந்து அப் புலவர் பெருமானின் ஆருயிரை யருந்த அணமியது.

திருமாலிடத்துப் பேரன்பு பூண்டொழுகிய கம்பர், அக்காலை, தமது உயிரைப் போக்க வந்த புலியினது உயிரைப் போக்கக் கருதி,

'வெங்கண் சிவந்து வெடிவான் முறுக்கி வெகுண்டெழுந்தென்
அங்கம் பிளக்க வரும்புலி யேயன நிரணியனைப்
பங்கம் படப்பட வள்ளுகி ராலுரம் பற்றியுண்ட
சிங்க மிருப்பது காண்கெடு வாயென்றன் சிந்தையுள்ளே,'

என்னுமோர் செய்யுளான் பிரகலாதனுக் கருள் செய்தரு ளிய நரசிங்கப் பெருமானின் பெருமையைக் கூறித் தம் மிடம் அணமிய புலியை அதட்டினார். உடனே பெருஞ் சினத்தோ டெழுந்த அப் புலி உயிர் நீங்கி மண்மீது சாய்ந்தது.

கம்பரது ஆற்றலைக் கரந்து நின்று கண்ட சோழன் உடனே தனது கையகமிருந்த வில்லில் அம்பைத் தொடுத்துக் கம்பர் திரு மார்பிற்குச் சரியாய் இலக்கு வைத்து விட்டான். சோழன் எய்த அம்பு கம்பரது உரத் தில் தைத்து ஊடுருவிச் சென்றது.

அவ்வமயம் கம்பர், அம்பு போந்த வழியில் நின்று கொண்டிருந்த சோழனை நோக்கி, முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் யாவும் அம் மன்னனது சூழ்ச்சியாலேயே நடைபெற்றிருக்க வேண்டுமெனத் துணிந்து,

'வில்லம்புஞ் சொல்லம்பு மேதகவே யானாலும்
வில்லம்பிற் சொல்லம்பு வீறுடைத்து—வில்லம்பு
பட்டுருவிற் றென்னையென் பாட்டம்பு நின்குலத்தைச்
சுட்டெரிக்கு மென்றே துணி,'

என ஒரு வெண்பாவால் சோழனது குலமுழுவதையுஞ் சபித்தனர்.

பின்னர், கம்பர், தமக்குப் பேருதவி புரிந்து வந்த சடையப்ப வள்ளலாரை நினைந்து,

'ஆன்பாலுந் தேனு மரம்பைமுதன முக்கனியுந்
தேம்பாய வுண்டு தெவிட்டுமனந்—தீம்பாய்
மறக்குமோ வெண்ணெய் வருசடையா கம்பன்
இறக்கும்போ தேனு மினி,'

என வெண்பா வொன்று பாடித் தமது நன்றிமறவா நல்லறிவை வெளிப்படுத்தி யென்றும் பொன்றாத தம் புகழுடம்பை யிந்நில வுலகில் நிறுத்திப் பேரானந்த வடிவாய் இலகுறும் பெரு வீடு சேர்ந்தார்.

கம்பர் இறந்ததை யுணர்ந்த அக்காலத்துப் புலவர்

'இன்றோநங் கம்ப னிறந்தநா ளிப்புவியில்
இன்றோநம் புன்கவிகட் கேற்றநாள்—இன்றேதான்
பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருப்ப
நாமடந்தை நூல்வாங்கு நாள்,'

எனத் தமக்குக் கம்பர்பால் அழுக்காறிருந்தும் அப்பெரும் புலவரின் பிரிவாற்றாமைக்குப் பெரிதும் கவன்று தமது கையற்ற நிலையைக் காட்டினர்.

# எட்டாம் இயல்

## இராமாயணத்தின் சிறப்பு

கம்பர் இயற்றியுள்ள இராமாயணத்தின் சிறப்பை யறியாதவர் சிலரே. அறிதற்கரிய பொருள் ஒன்றைப் பற்றிப் பேசுங்கால், பண்டிதரே யன்றிப் பாமரரும், இஃதென்ன கம்ப சூத்திரமோ?' என வினவுவதை நாம்,

பன்முறைக் கேள்வியுற்றுளோம். அச் சொற்றொடரால் இராமாயணத்தில் கவின் பெற்றிலகும் கம்ப சூத்திரங்கள் சில்வகை யெழுத்தால் பல்வகைப் பொருளையும் தம்மகத்தே செறிக்கப் பெற்றுத் திட்ப நுட்பம் பெற்றவை யெனத் தெள்ளிதிற் புலனும். அத்தகைய கம்ப சூத்திரங்களில் ஆழ்ந்து கிடக்கும் அரும் பொருள்களைக் கம்ப இராமாயணம் படித்துள்ள பற்பல புலவர்களுள் சிற்சிலரே யறிவர்.

இந் நில வுலகில் எண்ணிறந்த காப்பியங்கள் இலகா நிற்ப, கம்ப இராமாயணம் என்னும் சீரிய பனுவல் ஒன்றே கசடறக் கற்ற பெரும் புலவர்களால் போற்றப்பட்டு வருதற்குரிய காரணம் என்னை யெனப் பலர்க்கு ஐயுறவு நிகழலாம். இராமாயண மென்னும் இரத்தின மாலை அங்ஙனம புலவர்களால் பொன்னே போல் போற்றப் படுவ தற்குப் பல காரணங்கள் உள.

கம்ப இராமாயணத்தில் அழகுடன் விளங்கும் உவமைகட்கும் மற்றைப் பனுவல்களில் பரந்து கிடக்கும் உவமைகட்கும் உள்ள வேறு பாட்டைக் கற்று வல்ல புலவர் பலரும் அறிவர். கம்பர் ஒரு பொருளை நன்கு விளக்குதற்கு ஓர் உவமையைக் கூறுங்கால், உவமையைக் கூறிப் பொருளை விளக்குதலில் மாத்திரம் நில்லாமல், அந் நிலையில் படிப்பவருள்ளம் பரமானந்தமுறும் வண்ணம் ஒரு பெரிய விடயத்தைக் கூறி அதினின்றும் ஒரு சிறந்த ஒழுக்கத்தை உலகிற்குப் போதிப்பர். இத்தகைய விழுமிய உவமைகளை நாம் மற்றைக் காப்பியங்களில் காண்டலரிது.

வடமொழி வல்லுநர் துவனி யெனக் கூறும் ஒரு பேரழகினைக் கம்ப இராமாயணத்தில் நாம் பற்பல இடங்களில் காணலாம். இவ்வழகை நாம் ஏனைய நூற்களிற்

ாண்டல் அரிதினு மரிது. இவ்வழகு படிப்போர் மனத்ைதப் பரவசஞ் செய்யும் பான்மைத்து.

காப்பியத்திற்குப் பேரழகைத் தருவது அதனிடை பரும் பாத்திரங்களின் மன நிலையைக் கவிவாணர் செவ்வனம் உணர்ந்து தக்க சமயத்தில் அதனை அப் பாத்திரங்ளது உரைக்கண் வெளிப்படுத்தலே யாம். அத் திறனில் கம்பர் வடமொழிப் புலவராகிய காளிதாசர்க்கும் ஆங்கிலப் புலவராகிய ஷேக்ஸ்பியர்க்கும் சிறிதும் பின்னிட்டவரல்லர் என்பது பல பேரறிஞர்களின் துணிபு.

கம்ப இராமாயணப் பாக்கள் இடத்திற்கேற்ற வண்ணம மிடுக்கும் தளர்ச்சியும் பெற்று, இன்னோசையுடன் இயன்றிருத்தல் அறிஞர்க்கு ஆநந்தத்தை விளைக்கின்றது.

கம்ப இராமாயணத்தால் ஒருவற்கு உண்டாகும் இன்பத்தை யொத்த இன்பம் வேறு எப்பொருளானும் வந்துறுதல் இல்லை யென்பதை அபியுக்தர்,

‘ இம்பர் நாட்டிற் செல்வமெல்லா மெய்தி
யரசாண் டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா வோங்கு
நீழ லிருந்தாலும்
செம்பொன மேரு வனையபுயத் திறல்சே
ரிராமன திருக்கதையில்
கம்ப நாடன கவிதையிற்போற் கற்றோர்க்
கிதயங் களியாதே, ’

என மிக்க அழகுபட வுரைத்துள்ளார்.

மாடம பாக்கம் கிருஷ்ணசாமி முதலியார் கம்ப இராமாயணச் சிறப்பை,

‘ உம்பர் நாட்டாரும் உரைசெறி புகழ்மைசால்
கம்பநாட் டாழ்வான் கழறிரா மாயணம்
படிகோ லோச்சும் பஞ்சவன் வளர்த்த
வடிதமிழ்க் குரைகடல் வாயமு தென்கோ

மறைக்கிழ வோன்றவ மாணநாப் பொலியும்
நறைக்குழல் முடிபுனை நறுமல ரென்கோ
தொல்லிய லகத்தியம் தொல்காப் பியமெனுச்
சொல்லிய லைந்தின துகளில்காட் டென்கோ
ஆய்தொறும் இறும்பூ தணவ விழுச்சுவை
மாய்வின் றுதவு லின் வானரு வெனகோ
திராவிடம் அரில்தபச் செப்பம் பெறுமா
றராவிடக் கூர்வாய் அரமிஃ தெனகோ
வெம்பவ வலையொரீஇ விரசையங் கரையின்
உம்பர்வீ டுய்க்கும் ஒருபுணை யெனகோ
எனவறம் கரைநா இருங்கவிச் செல்வர்
மனமுறக் கிளக்கும் மாண்பிற் றெனநனி
*     *     மனனிய வறமுதல்
பாகுபா டுணர்த்தும் பண்புடைத் தாகி
வாகினின ஞெசை மரீஇப்பல் வனப்புச்
செறிந்து சில்லெழுத்திற் றிட்பநுட் பங்கள்
நிறைந்தின னைதழீஇ நெறிப்பட வொழுகுபு
பேரியல் பெருங்காப் பியமிதி னூங்கு
சீருற வுளதெனுச் செப்பவல் லுநர்முயற்
கோடுதுன் னூசிக் குடர்வான் பூக்கண்
கூடுறக் காட்டும் கொள்கைய ரம்மா
ஆழ முடைமையின் சூழ்கடல் வையம்
கம்ப சூத்திரம் அம்பரத் தவர்க்கும்
தெரித லரிதெனு செப்பு நெடுமொழி
*     *     *     *

எனத் தாம் அச்சிட்ட பாலகாண்ட வுரையின் அவையடக்கத்தில் மிக்க அழகுபட வுரைத்துள்ளார்.

இவ்வண்ணம் அறிவிற் சிறந்த புலவர் பல்லோரானும் விழுமிய நூலெனப் போற்றப்படும் கம்ப இராமாயணத்தை, தமிழ்த் தீஞ்சுவையைத் துய்க்க விழையும் ஒவ்வொருவரும் பல்காற் பயின்று, அச் சீரிய நூலின் பண்பையும் பயனையும் பெறுக.

ஸ்ரீ

# திருவள்ளுவர்

••○○○•••

## பதினான்கு சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

‘ திருமுடி மிசையார் மயிர்முடி யழகும்
தீரக்கபுண் டரநுத லழகும்
திரண்மணி புயந்தை வருஞ்செவி யழகும்
திகழ்நெடுந் தாடியி னழகும்
அருமுடி செபமா லிகைசினமுத் திரைசே
ரபயநேர் வலக்கையி னழகும்
அமிழ்துறழ் தமிழ்மா மறைமுறை வரத
மமைதரு மிடக்கையி னழகும்
கருமுடி யோகப் பட்டையி னழகும்
கடிகொள்கீட் கோவண வழகும்
கழல்களிற் றிகிரி வளைவரை யழகும்
கமலநல் லாதனத் தழகும்
தருமுடி முகிறேய் மயிலையி னிடைமா
தவர்கள்கண் டிறைஞ்சவீற் றிருக்கும்
தலைபுகழ்த் திருவள் ளுவரெனு நாம
சற்குரு சரணமே சரணம் ’

## பிறப்பும் வளர்ப்பும்

திரு வளர்ந்தொளிருந தொண்டை நாட்டின்கண் திருமயிலைப் பதியிடைச் சற்றேறக்குறையச் சாலிவாகன சகாப்தத்தின் தொடக்கத்தில் (கி. பி. முதனூற்றாண்டில்) ஆதி யென்பாட்கும் பகவன் என்பாற்கும் பிறந்த மக்கள்

எழுவருள் ஏழாமைந்தராய்ப் பிறந்தார் திருவள்ளுவர் எனக் கன்ன பரம்பரைக் கதை வழங்கி வருகின்றது. புலவர் புராணமுடையாரும்,

'மனுபே ரருட்சீ ரெய்தி வாழ்ந்தவள்
ளுவ நற் பத்தி
முன்னுதித் துய்ந்த வௌவை முதுசரித்
திரத்திற் றேற்றும்
பினனுதித் திட்ட வேழாம் பிள்ளை
யொருவே ளாளன்
தன்னுடைத் தவப்பே றெனனத் தனியெடுத்
தகம்புக் கானே,'

என மேற்கூறிய கதையை யொட்டியே கூறியுள்ளார்.

'உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தா
னுத்தர மாமதுரைக் கச்செனப—விப்பக்க
மாதானு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு,'

என நல்கூர் வேள்வியார் பாடியுள்ள திருவள்ளுவ மாலைச் செய்யுளினின்று திருவள்ளுவர் பிறப்பிடம் தென்மதுரை யெனக் கொண்டு அவர் வதிந்த இடம் திருமயிலை யெனக் கோடல் பொருத்தமாம் எனத் திருவாளர் 'மு. ராகவையங்கார். செந்தமிழ்ப் பத்திரிகையின் கண் வரைந்துள்ளார்.

பகவன் என்பது திருவள்ளுவருடைய தந்தையின் பெயர் என்பதற்கு யாதொரு நூல் ஆதரவு மில்லை யென்றும், திருவள்ளுவர்தம் தந்தை 'யாளிதத்தன்' எனும் ஒரு வேதியன் என்பது ஞானமிர்த நூலில் குறிக்கப்பட்டுள்ளதென்றும் ஒரு கதை வழங்கி வருகின்றது.

புலவர் புராணமுடையார் திருவள்ளுவரது திருப்பெயரைப் பற்றிக் கூறுங்கால்,

'எள்ளுபுன மதத்தோர் நாண
எலும்பொர்பெண் ணுருவா மூரில்
உள்ளுளா ரொடூவா மாமல்
ஊர்ப்புறச சேரி சார்ந்து
தெள்ளுசொற் புலமை வாய்ந்து
சேலெய் திருந்த வாற்றால்
'வள்ளுவ னென்றா பல்லோர்
வளமையோ னெனலோ ராரே,'

எனக் கூறி யிருத்தல் கவனிக்கற்பாலது.

திருக்குறளின் சிறப்புப் பாயிரமாகிய திருவள்ளுவ மாலைக்கு உரை கண்ட பெரும்புலவர் திருத்தணிகைச் சரவணப்பெருமாளையர்,

'திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—விருக்க
வுருத்திர சன்ம ரெனவுரைத்து வானி
லொருக்கவோ வென்றதோர் சொல்,'

என்ற முதல் நேரிசை வெண்பாவிற்குத் தாம் எழுதியுள்ள விரிவுரைக்கண், 'திருவள்ளுவரென்னும் பெயருள் திரு வென்பது உயர்வையும் வள்ளுவரென்பது வண்மையை யுடைய ரென்பதையும் விளக்கி நின்றன வாகலின், அது வேதத்தில் இலைமறை காய்கள் போற் பலவிடங்களினு மறைந்து வெளிப்படாதிருந்த மெய்ப்பொருள்களை யெல் லாம் தொகுத்து உலகத்தாருக்குக் கொடுத்தருள் செய்த வர் என்னுங் காரணம் பற்றி வந்த பெயராயிற்று. வள்— முதனிலை, அர்—இறுதிநிலை, உ—சாரியை, அம் முத னிலைக்குப் பொருள் ஈகை,' எனக் கூறியுள்ளார்.

கபில ரகவலில்,

'தொண்டை மண்டலத்தில் வண்டமிழ் மயிலைப்
பறைய ரிடத்தில் வள்ளுவர் வளர்ந்தனர்,'

எனக் கூறப்பட்டுள்ளது.

திருவள்ளுவர் வரலாற்றைக் கூறும் நேரிசை யாசிரியப்பா ஒன்றின்கண்,

'செப்புமவ வெழுவருட் டிருவள் ளுவர்தா
மைப்புய லணிபொழின் மயிலாப் பூரில்
வள்ளுவர் மனையிடை வளர்ந்தன ராங்கவர்,'

என்னும், அடிகள் காணப்படுகின்றன.

பிங்கல நிகண்டில்,

'வள்ளுவன சாக்கை யெனும்பெயர் மன்னற்
குள்படு கருமத் தலைவற் கொனறும்,'

எனவும், சூடாமணி நிகண்டில்,

'வருநிமித்திகன்பேர் சாக்கை வள்ளுவ னெனறுமாகும்,'

எனவுங் குறிக்கப்பட்டிருத்தலால், வள்ளுவர் என்னும் பெயர், கன்மத்தலைவர், சோதிடர் என இரு பொருளை யுடையதேனும், உலக வழக்கில் பறையர்களுக்கு மறையவனாய்ச் சோதிடங் கூறுதலையே தொழிலாகக் கொண்டு தன் வாணாட்களைக் கழித்து வரும் வள்ளுவ குடியிற் பிறந்த வனையே சுட்டுகின்றது.

இருமொழிப் புலவர் திருவாளர் தி. செல்வக்கேசவராய முதலியார் தாம் எழுதியுள்ள திருவள்ளுவர் என்னும் நூலில், 'சங்கப் புலவர்கள் இவரைத் தேவர், முதற்பாவலர், மாதாநுபங்கி, செந்நாப்போதார், எனப் பல வகையாகப் புனைந்துரைத்தனரேனும்,

'அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவ னெனபானோர் பேதை யவனவாய்ச்சொல்
கொள்ளா றறிவுடை யார்,'

என்கிற பாட்டில் காகுஸ்வரம் என்கிற ஒலிக்குறிப்பினாலே, சாதியிழிவு தோன்ற, 'வள்ளுவ னென்பான்' என்பதாக உரைத்திருத்தலின், இவர்க்கு வள்ளுவரோடு

உண்டான தொடர்பால் தோன்றிய காரண இடுகுறியே போலும், வள்ளுவர் என்னுந் திரு நாமம்,' எனக் கூறியுள்ளார்.

திருவள்ளுவர்க்கு இப் பெயரன்றி ஒன்பான் திருப் பெயர் உலகிடை வழங்கப் பெறுகின்றன. அப் பெயர்களுக்குத் தமிழ்ப் பெரும் புலவர் திருவாளர் கோ. வடிவேலு செட்டியார், தெளிபொருள் விளக்கத்துடனும் அரிய குறிப்புரையுடனும் பதிப்பித்துள்ள திருக்குறள் நூலில் தாம் எழுதியுள்ள பொருளைக் கீழே காண்க :—

## 1. நாயனர்

'நாயன்—நடத்துவோன்; நாயன் என்பது இறையனர், நந்தனர் என்பவற்றைப் போல உயர்வுப் பொருளுணர்த்தும் ஆர் விகுதி புணர்ந்து நாயனர் என்றாயிற்று. நாயன் என்பதன் பொருள் நடத்துவோனென்பது, 'கோ நாய,' 'அசுவ நாய, என்றற் றொடக்கத்துப் பிரயோகங்களால் நன்கு விளங்கும். எனவே, நாயனர் என்பது திருக்குறள் வாயிலாக மக்களை நன்னெறியிற் செல்லுமாறு நடத்தும முதன்மை பெற்றவரென்னுங் குறியீடு பெற்றதாயிற்று. மதுரைப் பெருமருதனர், 'வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனு, ரோதவழுக் கற்ற துலகு,' என்று கூறியதிங் குணர்தற் பாலதாம்.'

## 2. தேவர்

'தேவர்—தெய்வத் தன்மை யுடையவர். ஈண்டுத் தெய்வத் தன்மையாவது பிற புலவர் எடுத்துச் சொல்லுதற்கரிய முக்கிய விஷயங்களை யெல்லாம் மக்கள் எளிதில் புறியுமாறு தொகுத்துச் சொல்லுதலாம். உறையூர் முதுகூற்றனர், 'தேவிற் சிறந்த திருவள்ளுவர்,' என்று கூறியதிங்குணர்தற் பாலதாம். இங்ஙனமன்றி, தேவர் என்ப

தற்கு மற்றைப் புலவரினும் மிகுதியான பிரகாசத்தினை (மிகு புகழை) யுடையவ ரென்று பொருள் கூறுதலும் பொருந்தும். தேவர் என்பதன் பகுதியான திவ் என்பதற்குப் பிரகாசம் என்பது பொருளாம்.'

## 3. முதற்பாவலர்

'முதற்பாவலர்—முதன்மையாகிய பாவலர்; முதன்மை—எப்பாவலரினுஞ் சிறந்து நிற்றல்; பாவலர்—பாவியற்றுவதில் வன்மையுடையார்; பா—பாட்டு. இங்ஙனமன்றி, பாக்களில் முதன்மையுடைய வெண்பாக்களில் முதன்மையாயுள்ள குறள் வெண்பாவினால் சொற் சுருங்கிப் பொருள் விரிந்து நிற்க நூலியற்றினமை பற்றி இவ்வாசிரியர்க்கு முதற் பாவலர் என்று பெயருண்டாயிற்றென்று கூறினு மொக்கும். ஆசிரியர் நல்லந்துவனார், 'முப்பான் மொழிந்த முதற்பா வலரொப்பா, ரப்பா வலரினு மில்,' என்றும், கீரந்தையார், 'தப்பா முதற் பாவாற் றமாண்ட பாடலினாற், முப்பாலி னாற்பான் மொழிந்தவர், * * * தெய்வத் திருவள்ளுவர்,' என்றும் கூறினமை யிங்குக் கவனித்தற் பாலதாம்.'

## 4. தெய்வப் புலவர்

'தெய்வப் புலவர்—தெய்வத் தன்மை பொருந்திய அறிவுடையவர். புலமை—கல்வி யறிவு; தெய்வப் புலமை—பிறர் மாட்டோதுதற் காரணமாகப் புலமை பெறாது இயல்பாகவே புலமை நிரம்பப் பெறுதல். இங்ஙனமன்றி, அசரீரி (கடவுள்), நாமகள் என்னும் தெய்வங்களால் சிறப்பித்துச் சொல்லப்பட்ட புலமையுடையவ ரானதினாலே இவ்வாசிரியர் தெய்வப் புலவரென்று சிறப்பித்துச் சொல்லப்பட்டா ரெனினு மொக்கும். 'சிறப்பினாகிய பெயர் நிலைக் கிளவிக்கு' என்னுந் தொல்காப்பியச் சூத்திரவுரையில் சேனாவரையர், 'சிறப்பாவது மன்னர் முதலாயினாராற்

பெரும் வரிசை,' என்று கூறி, உதாரணங்களுள், 'தெய் வப் புலவன் திருவள்ளுவன்,' என்றுங் கூறி யிருத்தலால், திருவள்ளுவர்க்குத தெய்வப் புலவர் என்னும் பெயர் சிறப்புப் பெயரா மென்பதாயிற் றென்க. இவர் தெய்வப் புலவரானமை பற்றி யன்றோ, அசரீரி, 'திருத்தகு தெய் வத் திருவள்ளுவரோ, டுருத்தகு நற்பலகை யொக்க— விருக்க, உருத்திர சன்மர்,' என்று கூறிற்று.'

## 5. நான்முகனார்

'நான்முகனார்—நான்முகனது அம்சமாகப் பிறந்தவர். நான்முகன்—பிரமன்; அம்சம்—கூறு. ஆரிய பாஷை வாயிலாக வேதத்தை வெளியிட்டருளிய நான்முகனாரே திருவள்ளுவராகப் பிறந்து தமிழ்ப் பாஷை வாயிலாக வேதத்தி னருங் கருத்துக்களை வெளியிட்டருளினமை பற்றி, இவ்வாசிரியர் நான்முகனா ரென்று சொல்லப்பட் டார். உக்கிரப் பெருவழுதியார், 'நான்மறையின் மெய்ப் பொருளை முப்பொருளா நான்முகனதேதான், றன்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த—நூன்முறையை,' என்றும், காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார், 'மெய்யாத வேதப் பொருள் விளங்கப்—பொய்யாது, தந்தா னுலகிற் குத் தான்வள் ளுவனாகி, யந்தா மரைமே லயன்,' என்றும் கூறியுள்ளவை யிங்குக் கவனித்தற் பாலனவாம்.'

## 6. மாதாநுபங்கி

'மாதாநுபங்கி—தருக் கொழிதலுடையான். தரு க்கு—அகங்கரித் தொழுகுதல். மாதாநுபங்கி யென்பது மாதம், அநுபங்கி யென்னும் இரு மொழியாலாய தொடர் மொழி; மாதம்—தருக்கு; அநு—உபசர்க்கம்; பங்கி— பங்கஞ் செய்தவன். இங்ஙனமன்றி, மாதாநுபங்கி யென்பதற்கு மாதாவைப் போலும் ஒழுக்கினன் என்று

பொருள் கூறுதலு முண்டு. தாய் தனது பிள்ளையி னிடத்து அன்பு செலுத்துதல் போன்று, இவர் உலகத்தா ரிடத்து அருள் செலுத்துபவர் என்பது இதன் திரண்ட பொருளாம். நல்கூர் வேள்வியார், 'இப்பக்கம், மாதானு பங்கி மறுவில் புலச்செந்நாப், போதார் புனற்கூடற் கச்சு,' என்று கூறியதிங் குணர்தற் பாலதாம்.'

## 7. செந்நாப் போதார்

'செந் நாப் போதார்—செம்மை வாய்ந்த நாவாகிய மலரை யுடையார். செம்மை—சொல்லின்கண் கோணுத லின்மை; அஃதாவது மனத்தின்கண் கோணுதலின்றி அறங்கிடந்தவாறு சொல்லுதல். நாயனார் தாங்கூறுவதை, நன்றென எப் பாவலரும் இயையுமாறு தேன்போ லினிக்கக் கூறுதல்பற்றி அவரது நாவானது தேனிருத்தற் கிடனான பூவாக வுருவகிக்கப்பட்டது. நாமகள், 'பின், வள்ளுவன் வாயதென் வாக்கு,' என்று கூறிய உரிமை பற்றித் திருவள்ளுவரது நாவை (வெண்டாமரைப்) பூவாக் கிச் செந்நாப் போதார் என்று அவர் கூறப்பட்டார் எனி னும் அமையும். நல்கூர் வேள்வியார், 'செந்நாப், போதார் புனற் கூடற் கச்சு,' என்று கூறியது மறிக.'

## 8. பெருநாவலர்

'பெருநாவலர்—பெருமை பொருந்திய நாவலர். பெருமை—பிறர்க்கில்லாத சிறப்பு; நாவலர்—நாவன்மை யுடையவர். நாவன்மை—நட்பினரே யன்றிப் பகைவரும் விரும்பி யேற்றுக் கொள்ளுமாறு சொல்லுஞ் சொல் வன்மை; இது, 'கேட்டார் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும், வேட்ப மொழிவதாஞ் சொல்,' என்னுங் குறளாலும், 'இதனாற் சொல்வின திலக்கணங் கூறப்பட் டது,' என்னு மதனுரையாலும் நன்கு விளங்கும். அரி

...ற் கிழார், 'பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு, தெரிந்து திறநெறிதாறுந் தேரச்—சுருங்கிய, சொல்லால் விரித்துப் பொருள் விளங்கச் சொல்லுதல், வல்லாரார் வள்ளுவரல் லால்,' என்றும், கௌணியனார், 'நாப்புலமை வள்ளுவனார்,' என்றும் கூறியன இங்குக் கவனித்தற் பாலனவாம்.'

## 9. பொய்யில் புலவர்

'பொய்யில் புலவர்—பொய்ம்மை யின்றிய புலமை யுடையார். எனவே, திருவள்ளுவர் ஐயந்திரிபின்றி யுள்ளதை யுள்ளபடி யுலகத்தார்க் குணர்த்தினவ ரென்ப தாயிற்று. ஈண்டுப் பொய்ம்மை—ஐயந்திரிபு. பரணர், 'வாலறிவின் வள்ளுவரும்,' என்றும், காரிக் கண்ணனார், 'மெய்யாத வேதப் பொருள் விளங்கப்—பொய்யாது, தந்தா னுலகிற்கு,' என்றும், தேனிக் குடிக் கீரனார், 'பொய்ப்பால பொய்யேயாய்ப் போயினபொய் யல்லாத, மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே—முப்பாலிற், றெய் வத் திருவள் ளுவர் செப் பியகுறளால், வையத்து வாழ் வார் மனத்து,' என்றுங் கூறியன இங்குணர்தற் பாலன வாம்.'

ஆதி யென்னும் அரிவை திருவள்ளுவரைத் திரு ...யிலையில் ஈன்ற வுடன், கணவனிடம் தான் முற்கூறி ...ள்ள உறுதி மொழியின்படித் தன் மகவை விட்டு நீங்கு ...ற்கு மனம் பொருது தயங்கி நிற்க, அக்காலை, அப் ...ணிற்றிளங் குழவியாகிய திருவள்ளுவர்,

'எவ்வுயிருங் காக்கவொரு வீசனுண்டோ வில்லையோ
அவ்வுயிரில் யானொருவ னல்லனோ—வவ்வி
அருகுவது கொண்டிங் கலைகுவதே னன்னே
வருகுவது தானே வரும்,'

என வொரு வெண்பா பாடினர். அப்பாடலைக் கேட்ட

ஆதி யென்பாள் உளந் துணிந்து, திருவள்ளுவராகிய அச் சிறு மகவைத் திருமயிலையிலேயே விட்டுச் சென்றனள்.

அங்ஙனம் திரு மயிலையில் ஆதி யென்பாளால் விடப் பெற்ற குழந்தை, அவணிருந்த சிவாலயத்தில் ஓர் இலுப்பை மரத்தடியிலிருந்து, அம் மலரினின்றும் துளித்த தேனைச் சுவைத்து வளர்ந்து வந்தது. ஒரு நாள் ஒரு வேளாளன் மனைவி புத்திரப் பேற்றின் நிமித்தம் திருவள்ளுவராகிய திருக் குழந்தை வளர்ந்து வந்த அச் சிவாலயத்தின் ஒரு புடை தவங் கிடந்தனள். அவ்வமயம், 'இலுப்பை மரத்தடியிலுள்ள குழந்தையை நீ யெடுத்துக் கொண்டு போய்த் திருவள்ளுவரென்னும் திருப்பெயரிடுக,' என அசரீரி வாக்குண்டாயது.

புத்திரப் பேற்றைக் குறித்துத் தவஞ் செய்திருந்த மடந்தை அசரீரியின் வாக்கைக் கேட்டு அளவற்ற ஆநந்த முற்று, இலுப்பை மரத்தடியிற் கிடந்த குழந்தையை வாரி யெடுத்து, மார்போடணைத்து, உச்சி மோந்து, அம்மகவிற்குக் கணக்கற்ற முத்தங்களை யிட்டாள். பின்னர், அம் மாது தன்னகம் விரைந்து சென்று, கணவனைக் கண்டு, கோயிலில் நிகழ்ந்த செய்திகளை யெல்லாம் விரைந்து கூறித் தான் கொணர்ந்த குழந்தையை அவன்பால் ஈந்தாள். அக் குழந்தையின் திருமுகப் பொலிவினைக் கண்ட அவ் வேளாளன், 'நாம் சென்ற பல் பிறவிகளில் செய்துள்ள பெருந் தவப் பயனால் இச் சீரிய மகவைப் பெற்றேம்,' என்று கூறிப் பேருவகை பூத்து எல்லாம் வல்ல இறைவரைப் பன்முறை இறைஞ்சினன். பின்னர், அவ்வேளாளனும் அவன் இல்லக்கிழத்தியும் அம் மாண்புடை மகவிற்கு அசரீரியருளிய வாக்கின் வண்ணம் திருவள்ளுவரெனும் திருப்பெயரிட்டு, அக் குழந்தையைப் பொன்னேபோல் போற்றி வளர்த்து வந்தனர் என்பது கன்ன பரம்பரைச் செய்தி.

புலவர் புராணத்தில்,

'* * * * * *

* * * * * *

பின்னுதித் திட்ட வேழாம் பிள்ளையை யொருவே ளாளன்
தன்னுடைத் தவப்பே றெனனத் தனியெடுத் தகம்புக் கானே

புக்கவன் மனைபா லீந்தான் பொருக்கெனை உவள்கைக் கொண்டு
மிக்கபால் சுரந்து கொங்கை விம்மலால் வியப்புற் றூட்டி
யிக்கவின் சேயை யிந்நா ளெளிதினி னமக்கு நல்கன்
முக்கணு னருளே யென்ன முடிவில் பேருவகை பூத்தார்,'

எனக் கூறி யிருத்தலைக் கொண்டு, திருவள்ளுவராகிய திருக் குழந்தையை முதலிற் கண்டெடுத்தவன் வேளாளன் என்பது நமக்குப் புலனுகின்றது. கன்ன பரம்பரையின் கூற்றினும் இது பொருத்த முடையதாகக் காண்கிறது.

# இரண்டாம் இயல்

## திருவள்ளுவர் அற்புதச் செயல்கள்

சிறு குழந்தையாகிய திருவள்ளுவரை வளர்த்து வந்த வேளாளன், அக் குழந்தையைப் பற்றித் தன் உறவினர் கூறும் பழி மொழிக ளஞ்சி, வீட்டின் புறத்திருந்த தொழுவத்தில் தொட்டிலிட்டுப் பண்ணைக்காரரைக் காவல் வைத்து அம் மகவை வளர்த்து வந்தான்.

சில ஆண்டுகள் சென்ற பின்னர், திருவள்ளுவர் தம்மைப் பேரன்புடன் வளர்த்து வந்த வேளாளனையும் அவன் மனைவியையும் நோக்கி, "நீங்கள் என்னால் உந்தம் கிளைஞரால் நிந்திக்கப் படுதலைக் கேட்க என் மனம் வருந்து கின்றது. ஆதலான், நான் வேறிடத்திலிருந்து, நீங்கள் என்னை நினைக்கும் பொழுது ஈண்டுப் போந்து, உமக்கு வேண்டுவனவற்றைச் செய்வேன்," என்று கூறி, அவர்க

ளிடம் விடை பெற்று, அவ் வூர்க்கண்ணிருந்த ஒரு பனை மரத்தின் அடியில் சின்னாள் இருந்தனர். அம் மரத்தடியின் நிழல் திருவள்ளுவரை விட்டு நீங்காதிருந்தமையைக் கண்ட அவ் வூரார், அப் பெரியாரிடம் வந்து, 'இப் பிள்ளை தேவனோ அல்லது முனிவனோ!' என்று தமக்குள் ஐயுற வுற்று, அப்பேரறிஞரை வாயார வந்தித்து வணங்கினர்.

பின்னர், திருவள்ளுவர், 'நமக்கு இவ்விடம் ஏற்ற தன்று,' எனக் கருதிப் பனை மரத்தை விட்டு நீங்கித் திருமூலர் முதலிய சித்தர்கள் வதிந்திருந்த மலைக்குச் சென்று, ஆண்டுத் தவஞ் செய்து கொண்டிருந்தவர்களில் தாமும் ஒருவராகச் சில காலம் இருந்தனர்.

திரு வள்ளுவர் தவசிகள் குழாத்துடன் வதிந்து வந்த காலத்துத் தொண்டை மண்டலத்தில் ஒரு கொடிய வேதாளம் அந் நாட்டுப் பயிர்களை யழித்தும், உயிர்களைக் கொன்றும் அப் பதிக்குப் பெருந் துன்பத்தை விளைத்து வந்தது.

அக்காலை, காவேரிப் பாக்கம் என்னும் ஊரில் ஆயிரம் ஏர் வைத்துப் பயிர்த் தொழில் நடாத்தி வந்த மார்க்க சகாயன் என்னும் பெயரிய செல்வத்திற் சிறந்த வேளாளன் ஒருவன், தொண்டை மண்டலத்திற்குப் பேரின்னல் இழைத்து வந்த அக் கொடிய வேதாளத்தை யடக்கு வார்க்கு வேண்டிய பொருளும் ஓர் ஊரும் தருவதாக நாடெங்கும் பறை யறைவித்திருந்தான். அவ் வேதாளத்தை ஒருவராலும் அடக்க முடியாமையை யுணர்ந்த அவ் வேளாளன், திருமூலர் முதலிய அருந்தவசிகள் குழுமி யிருந்த மலைக்குச் சென்று, வேதாளத்தின் கொடுஞ் செயலைக் கூறினன். வேளாளனது வாய் மொழி யுணர்ந்த முனிவர்கள், அவ் வேளாளனுக்குத் திருவள்ளுவரைச் சுட்டிக் காட்டி, அவரிடம் அவனது குறையைக் கூறும்படி பணித்தனர்.

மார்க்க சகாயன் என்னும் வேளாளன் முனிவர்கள் பணித்த வண்ணம், திருவள்ளுவரிடம் போந்து, அப் பெரியாரை வணங்கி, தொண்டை மண்டலத்தைப் பாழாக்கி வந்த வேதாளத்தின் கொடுஞ் செயல்களைக் கூறினன். செந்தண்மை பூண்டொழுகிய திருவள்ளுவர் அக்கணமே அக் கொடிய வேதாளத்தைப் பஞ்சாக்கர மந்திரத்தால் வென்று தொண்டை மண்டலத்தைக் காத்தனர் என்பதும் கன்ன பரம்பரைக் கதையே.

திருவள்ளுவரது அற்புதச் செயலைக் கண்ட மார்க்க சகாயன் என்பான், அப் பேரறிவாளரைப் பெரிதும் வணங்கி, "பெரியீர், யான் அன்புடன் கொடுக்கும்பொருளையும் ஊரையும் பெற்றுக் கொண்டு, என்னுடைய செல்வப் புதல்வியாகிய வாசுகி யென்பாளையும் திருமணம் புரிந்தருளல் வேண்டும்," என்றான்.

மார்க்க சகாயன் என்னும் வேளாளன் உள்ளன்புடன் கூறியவற்றைக் கேட்ட திருவள்ளுவர், அவ் வேளாளனை நோக்கி, "ஐய, உன் பெண் நான் கொடுக்கும் மணலை அன்ன மாக்கி யெனக் கிடுவளேல், யான் அம் மாதை மிக்க மகிழ்ச்சியுடன் மணம்புரிந்து கொள்வேன்," என்றார்.

பின்னர், வாசுகி யென்னும் மாதரசி, திருவள்ளுவர் கொடுத்த மணலை அன்னமாக்கி யளித்தாள். அதனைக் கண்ட திருவள்ளுவர், பேருவகை பூத்து, 'இம்மங்கையே நமக்கேற்ற மனைவி. இம் மங்கையர்க்கரசியின் துணை கொண்டு நாம் உலகிற்கு இல்லற மென்னும் நல்லறத்தை யினிது நடத்திக் காட்டலாம்,' எனத் தமக்குள்ளே யெண்ணிக் கொண்டு, வாசுகி யென்னும் வனிதையை விதிப்படி கடிமணம் புரிந்தனர்.

திருமணம் நடைபெற்ற பின், திருவள்ளுவர், மார்க்க சகாயன் என்னும் மாமன் வீட்டில் சில நாள் முறைப்படித்

தங்கி யிருந்தனர். பின்னர், அப் பெரியார், தம் மனைவி யாகிய வாசுகி யென்பாளுடன் திரு மயிலை போந்து, தமக் கோர் இல்லத்தை ஆக்கிக் கொண்டு, பாவமில்லாதது நெய் தற் றொழிலே யெனத் தேர்ந்து, அவ் வூரிலிருந்த ஏலேல சிங்கர் என்பாரிடம் நூல் வாங்கி, ஆடை நெய்து, அதனால் வரும் கூலியால் தம் வாழ்நாட் கழித்து வந்தனர்.

அக் காலத்து, திருவாலங் காட்டில் எழுந்தருளியுள்ள சிவபிரானார், மகிடா சூரனைக் கொன்று தருக்குற்றிருந்த காளியுடன் பல்வேறு நடனம் புரிகையில், காளியும் சிறி தும் சோர்வுறாது நடனம் புரிந்தனள். அவ்வமயம் சிவ பிரானாரது குண்டலம் கழன்றது. இறைவர் அக் குண்ட லத்தைக் காதிற் சேர்ப்பான் கருதி ஊர்த்துவ பாதமாக நடனஞ் செய்தனர். காளி பெண்பாலாகையால், அவ் வண்ணம் நடனம் புரிதற்கு மனம்பொறாது நாணி நின்றாள்.

சிவ பிரானார் திடீரென ஊர்த்துவ நடனஞ் செய்த தற்குக் காரணந் தெரியாமல் தேவர்கள் எல்லாம் மயங்கி நின்றனர். அவர்கள் மயக்கத்தை யுணர்ந்த ஈசர், அன் னோரை நோக்கி, "அமரர்காள், நீங்கள் திருமயிலையில் வதியும் திருவள்ளுவர்பாற் சென்று உமது ஐயத்தை யகற்றிக் கொண்மின்," எனக் கட்டளை யிட்டார்.

சிவபிரானார் பணித்த வண்ணம், தேவர்கள் திருவள் ளுவர்பாற் சென்று, அப் பெரியாரின் திருமுன் நின்றனர்.

திருவள்ளுவர், தேவர்கள் நின்ற குறிப்பை யுணர்ந்து,

'பூவி லயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவி யளந்தோனுந் தாமிருக்க— நாவில்
இழைநக்கி நூனெருடு மேழையறி வேனோ
குழைநக்கும் பிஞ்ஞகனறன் கூத்து,'

என்றொரு வெண்பா பாடினர். அப் பாவினைக் கேட்ட தேவர்கள் தம் ஐயம் நீங்கி இருப்பிடஞ் சென்றனர்.

ஒரு நாள் திருவள்ளுவர் நெய்தற்கு நூல் வாங்க ஏலேல சிங்கர் வீட்டிற்குச் சென்று, "செட்டியார் எங்கே?" என்று வினவினர். அப்பொழுது அவணிருந்தோர், "செட்டியார் சிவ பூசை செய்கிறார்," என்றனர். உடனே திருவள்ளுவர், "செட்டியார் சிவ பூசை இங்குச் செய்கின்றனரோ? குப்பத்தில் செய்கின்றனரோ?" என்றனர்.

திருவள்ளுவர் கூறியதை ஏலேல சிங்கர் தம் மனைவி மூலமாய் உணர்ந்து, பூசையினின் றெழுந்து ஓடி வந்து, திருவள்ளுவர் திருவடிக் கமலங்களில் வீழ்ந்து வணங்கி, "அடியேனை யாள வந்த ஐயரே, பிறவிப் பெருங் கடலினின்று அடியேனை எவ்வகையேனும் கரை யேற்றுவித்தருளும்," என்று பெரிதும் வேண்டினர். அப்பொழுது திருவள்ளுவர் ஏலேல சிங்கரைத் தம் மாணவராக ஏற்றுக் கொண்டனர்.

ஒரு நாள் திருவள்ளுவர், ஏலேல சிங்கரது பக்குவத்தையும், தம்முடைய மற்றை மாணவர்களது பக்குவத்தையும் பரிசோதிக்க எண்ணி, அவர்களை யழைத்துக் கொண்டு ஒரு வனத்திற்குச் சென்றார். அப்பொழுது அவ்வனத்தில் திடீரெனப் பெரு வெள்ளம் பெருகியது. திருவள்ளுவர் அவ் வெள்ளத்திற்குச் சிறிதும் அஞ்சாது அதனிடை நடந்து சென்றார். அவ்வமயம் ஏலேல சிங்கரொழிந்த மற்றை மாணவர்கள் எல்லாம் மனத்திடனற்று அப் பெரு வெள்ளத்திற் கஞ்சித் திருவள்ளுவரைத் தொடர்ந்து செல்லாது பின்னிட்டனர். ஆனால், ஏலேல சிங்கர் திருவள்ளுவர்பால் பெரு நம்பிக்கை கொண்டு, தங் குருவாகிய திருவள்ளுவரே எல்லாம் வல்ல இறைவர் எனக் கருதி அவர் பின் வெள்ளத்தில் நடந்து சென்றார். அப்பொழுது வெள்ளம் அவர்க்கு வழிவிட்டது.

பின்னர்த் திருவள்ளுவர் ஏலேல சிங்கரை ஓர் உயர்ந்த மரத்தின் நுனியில் ஏறும்படி கட்டளை யிட்டார். அவர் திருவள்ளுவரது கட்டளையின்படி மரத்தின் நுனியில் ஏறிய பின்னர், நின்ற கொம்பையும் பிடித்த கொம்பையும் விட்டுவிடும்படி திருவள்ளுவர் ஏலேல சிங்கர்க்குப் பணித்தார். ஏலேல சிங்கர் தமக்குப் பின் விளைவதைச் சிறிதும் சிந்தியாது திருவள்ளுவர்பால் தமக்குள்ள முழு நம்பிக்கையால் அப்பெரியார் ஏவிய வண்ணமே நின்ற கொம்பையும் பிடித்த கொம்பையும் விட்டுவிட்டு நின்றார். திருவள்ளுவரது திருவருளால் ஏலேல சிங்கர்க்கு யாதொரு கெடுதியும் நேரிடவில்லை. ஏலேல சிங்கரது குரு பக்தியைக் கண்ட திருவள்ளுவர்க்குப் பேரானந்தம் உண்டாயது. உடனே அப் பேரறிவாளர் ஏலேல சிங்கர்க்கு ஞானோபதேசஞ் செய்தருளினார்.

ஒரு நாள் திரு மயிலை நாட்டுக் கரசனாகிய அச்சுதன் என்னும் மன்னன் ஏலேல சிங்கருடன் பேசிக் கொண்டிருந்த பொழுது, "உமக்குப் புத்திரப் பேறுண்டாகும் வண்ணம் நீர் உம்முடைய ஞானாசாரியரைக் கேளும்," என்றான்.

மறு நாள் ஏலேல சிங்கர் திருவள்ளுவர்பாற் சென்று தமது கருத்தை வெளியிட்டார். அப்பொழுது திருவள்ளுவர், "எல்லாம் வல்ல இறைவர் விரைவில் அருள் புரிவர்," என்று திருவாய் மலர்ந்தருளினார்.

சில நாட் சென்றபின், ஒரு நாள் ஏலேல சிங்கரும் அவருடைய வாழ்க்கைத் துணைவியும் வழக்கம்போல் தரிசிக்கும் பசுவின் வாற்புறத்தில் சிவபிரானார் சிறு குழவியாயிருந்து அழுதலைக் கண்டு, பேரானந்தப் பெரு வெள்ளத்தில் மூழ்கி, அச் சிறு மகவை யெடுத்து மார்புற வணைத்து முத்தமிட்ட பின்னர்க் குருவின் திருவருளைப்

பெரிதும் வியந்து, அக் குழந்தையைக் கொண்டுபோய்த் திருவள்ளுவரது திருமுன்னர்க் கிடத்தி, அப் பெரியாரைப் பன்முறை வணங்கி நின்றனர்.

திருவள்ளுவர், ஏலேல சிங்கர் கொணர்ந்து கிடத்திய மகவைக் கண்டு புன்முறுவல் செய்து, அக் குழந்தைக்கு அழகானந்தர் என்னும் அரும் பெயரிட்டனுப்பினர்.

ஒரு நாள் ஏலேல சிங்கர் அரசுத மன்னனிடஞ் சென்று தமக்குக் குருவின் கருணையால் கிடைத்த அற்புதப் புத்திரப் பேற்றைக் கூறினர். அதனைக் கேள்வியுற்ற அம் மன்னன், ஏலேல சிங்கரை நோக்கி, "உமக்கு அக் குழந்தை தெய்வீகத் தன்மையால் கிடைத்திருக்குமானல், அஃது ஈண்டுத் தானே வரலாமே," என்றான். அம் மன்னன் அவ்வாறு கூறிய வுடனே அத் தெய்வீகத் தன்மை பொருந்திய குழந்தை அவன் மடியில் வந்திருந்தது. மகவை மடியிற் கண்ட மன்னன் பெரு வியப்புடன் பேரானந்தமு முற்றான்; அக் குழந்தையின் முகப் பொலிவைச் சிறிது நேரம் உற்று நோக்கினன்; பின்னர், அக் குழந்தையைத் தன் இன்னுயிர்க் காதலியிடம் கொடுத்தான். அவ்வரசி அக் குழந்தையை வாங்கி மார்போடணைத்து முத்த மிட்டாள். பின்பு, அக் குழந்தை அரண்மனையிலேயே வளர்ந்து வந்தது.

ஒரு நாள் ஏலேல சிங்கரது கப்பல் கரைதட்டியது. அதனை யுணர்ந்த திருவள்ளுவர் ஏலேல சிங்கரை யழைத்துக் கொண்டு கப்பலருகிற் சென்று, தம்முடைய திருக்கரங்களால் அக் கப்பலைத் தொட்டு, "ஏலையாவென் றிழுங்கள்," என்று பணித்தார். பலர் ஒன்று கூடி அவ் வண்ணமே அக் கப்பலை யிழுக்க, உடனே அது சரியாய் நின்றது.

ஒரு கால், மழை யில்லாமையால் பஞ்சம் உண்டாயிற்று. அச் சமயம் உணவின்றி அநேகர் மாண்டனர். அத்

துன்பத்தைக் கண்ணுற்ற அருட் பெருங் கடலாகிய திருவள்ளுவர், ஏலேல சிங்கரை நோக்கி, “ஐய, இப் பஞ்சம் ஒழியும் வரைக்கும் நீ வாங்கி வைத்துள்ள நெல்லை யெல்லாம் வாங்கின விலைக்குக் குறுணி யேற்றமாக விற்கக் கடவாய்,” என்று பணித்தருளினர். ஏலேல சிங்கர் குரு சொல் தவருமல் அவர் விரும்பிய வண்ணமே தம்மிடத்திருந்த நெல்லை யெல்லாம் விற்பனை செய்தார். பொருள் மலை போற் குவிந்தது. நெற் கூடோ சிறிதும் குறையாமல் இருந்தது. அவ் விந்தையைக் கண்ட ஏலேல சிங்கர் பெரு வியப்புற்றுக் குருவின் திருவருளைப் போற்றினர். பின்னர்ப் பெய்த பெரு மழையால் உலகம் செழிப்புற்றது. அப்பொழுது திருவள்ளுவர், ஏலேல சிங்கரையழைத்து, “இப்பொழுது நீ உன்னிடமுள்ள நெல்லை யெல்லாம் குறுணி குறைய வில்,” என்று கட்டளை யிட்டார். ஏலேல சிங்கர் குருவின் கட்டளைப்படியே தம்மிடமிருந்த நெல்லை யெல்லாம் விற்க, மறு நாளைக்குள் நெல்லெல்லாம் செலவாய் விட்டன.

பின்னர், திருவள்ளுவர், ஏலேல சிங்கரைப் பார்த்து, “நீ நெல்லை விற்றுப் பெற்றுள்ள பொருளை யெல்லாம் மாற்றிப் பொன்னுக்கி உருக்கித் திரட்டிக் கடலில் எறிந்து விடுக,” என்ருர்.

ஏலேல சிங்கர் தம்மிடம் இருநத பொருளை யெல்லாம் குருவினது விருப்பின் வண்ணமே செய்தனர். ஏலேல சிங்கரால் கடலில் எறியப் பெற்ற பொன்னுருண்டையை ஒரு மீன் விழுங்கிற்று. சில நாட்களுக்குப் பின்னர், அம் மீனை வலைக்காரர் பிடித்துச் சேதிக்கையில், அதன் வயிற்றில் மலினம் படிந்த கல்லொன்றிருக்கக் கண்டு, அவர்கள் அதனை ஏலேல சிங்கர்க்குக் கொடுத்தனர். அவர் அதனைக் கல்லென்று கருதி நீராடு மிடத்தில் இட்டனர். அக் கல், நடத்தல் முதலிய வினையால் மலினம் நீங்கி

ஒளிர்ந்தது. பின்னர், ஏலேல சிங்கர் அப் பொற் கல்லில் தமது பேர் வெட்டி யிருக்கக் கண்டு, அப் பொன் தமக் குரியதென் றுணர்ந்து, தம் குருவாகிய திருவள்ளுவ ரது திருவருளைப் பெரிதும் வியந்தார். இதுவும் கன்ன பரம்பரைக் கதையே.

இருமொழிப் புலவர் திருவாளர் தி. செல்வக்கேசவ ராய முதலியார்,

"வள்ளுவரிடத்தில் ஏலேல சிங்கர் என்பவர் ஈடுபட்டு மெய்யன்புடையவராக இருந்த வரலாற்றினுக்கு உலக வழக்கிலே, 'ஏலேல சிங்கன் பொருள் ஏழு கடல் போனா லுந் திரும்பும்,' என்கிற பழ மொழியும், 'ஏலேலோ ஏலவலி,' என்று சுமை யிழுக்கிற ஆட்கள் பாடுகிற பாட லுமே யன்றி, நூல்களின் வாயிலான சான்று ஒன்று மில்லை," எனக் கூறி யிருத்தலைக் காண்க.

# மூன்றும் இயல்

## சங்கத்தாரது தருக்கொழித்தல்

பாண்டிய நாட்டில், மதுரையம் பதியில், நக்கீரர் முதலிய சங்கப் புலவர்கள் தமது கல்விப் பெருக்கால் தருக்குற்று ஆண்டுப் போந்த புலவர்களை யெல்லாம் இகழ்ந்து வந்தனர். அங்ஙனஞ் செய்து வந்த அச் சங்கப் புலவர்களது தருக்கை யடக்கக் கருதிய அழகாநந்தர் முதலியோர் திருவள்ளுவரிடம் வந்து, "பேரறிவாளரே, மதுரைச் சங்கப் புலவர்கள் கல்விச் செருக்கால் ஆண்டுச் செல்லும் அறிஞரை யெல்லாம் இகழ்ந்து வருகின்றனர். ஆதலான் அவர்களது தருக்கை யொழிக்கும் பொருட்டும் உலகம் உயர் நிலையை யுறும் பொருட்டும், ஓதற்கெளிதா யும் உணர்தற் கரிதாயுமிருக்கும் வண்ணம் ஒரு சீரிய

நூலை யியற்றி அதனைக் கொண்டு அச் சங்கப் புலவர்கள் தருக்கை அறவே யொழித்தருள்க," என வேண்டினர்.

உலகிற்கு நன்மை புரிதலையே உயரிய நோக்கமாகக் கொண்டுள்ள திருவள்ளுவர், அழகாநந்தர் முதலிய சில அறிஞரின் வேண்டுகோட் கிணங்கி, வேதாகமங்களின் விழுப்பொருளைத் திரட்டி, எல்லா மதத்தினரும் மனமுவந்து மேற்கொள்ளும் வண்ணம் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என முப்பாலாக வகுத்து, ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண்பாக்களைக் கொண்ட நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களான் ஓர் அரிய நூலைத் தீந் தமிழ் மொழியில் இயற்றியருளினர். கலிப் பாவாற் சமைந்துள்ள நூல் ஆகு பெயரான் கலியெனப் பெயர் பெற்றுள்ளமை போல், குறட் பாவான் இயற்றப் பெற்ற இந் நூலும் குறள் எனப் பெயர் பெற்றுத் திரு வென்னும் அடை மொழியுடன் சேர்ந்து திருக்குறள் என வழங்கி வருகின்றது. இவ்வரிய நூலினுக்கு, முப்பால், உத்தரவேதம், தெய்வ நூல், திருவள்ளுவர், பொய்யா மொழி, வாயுறை வாழ்த்து, தமிழ் மறை, பொது மறை, திருவள்ளுவப் பயன் என வேறு பெயர்கள் இருப்பினும், திருக்குறள் என்னும் பெயரே பெரு வழக்கா யுளது. திருவள்ளுவர் தம் மாணவர்கட்கு உபதேசிக்கும் நிலையில் அமைந்துள்ள அப் பெரியாரது உருவச் சிலையில், இடக் கையிலுள்ள ஏட்டுச் சுவடியின்மேல் திருக்குறள் என்னும் பெயர் தீட்டப் பெற்றிருத்தலைக் கண்டு தெளிக.

திருவள்ளுவர், திருக்குறளை யியற்றிய பின்னர், சங்கப் புலவர்களது கல்விச் செருக்கை யொழிப்பான் கருதித் தாம் அரிதின் இயற்றிய திருக்குறளைக் கைக் கொண்டு, இடைக்கழி நாட்டின் வழியாகச் சென்றனர். அவ்வமயம் ஔவையார் நேர்படத் திருவள்ளுவர் பெரிதும் உவந்து, அவ்வம்மையாரைத் தம்முடன் கொண்டு

வழி நடந்தார். சிறிது போழ்தில் திருவள்ளுவர் இடைக்காடரையுஞ் சந்தித்துத் தாம் போகும் இடத்தையும் தமது மனக்கோளையும் அவரிடம் கூறினார்.

உடனே இடைக்காடர் திருவள்ளுவரை நோக்கி, "மதுரைச் சங்கம் இடையாலும் கடையாலும் அழியக் கடவது," எனச் சிவபிரானார் தம்மை யிகழ்ந்த நக்கீரர் முதலிய சங்கப் புலவர்களை நோக்கிச் சபித்துள்ளார். இறைவரது சாபத்தின்படி யெம்மாலும் உமமாலும் மதுரைச் சங்கம் அழிய வேண்டு மாதலின், யானும் உம்முடன் வருகிறேன்," என்றார்.

பின்னர், திருவள்ளுவர், ஔவையார், இடைக்காடர் ஆகிய மூவரும் மதுரையம் பதியை யடைந்து, வையை யாற்றில் நீராடி, மீனாட்சி யம்மையாருடன் வீற்றிருக்கும் சொக்கலிங்க நாதர் திருக்கோயிலினுட் புக்கு, அவ்விறைவரையும் தேவியாரையுங கண்ணாரக் கண்டு, உள மகிழ்ந்து வாயார வந்தித்து வணங்கினர்.

பின்னர், திருவள்ளுவர், சொக்கலிங்க நாதரது திருக்கோயிலின் கண்ணே, பாண்டியன் முன்னிலையில் ஔவையார், இடைக்காடர் முதலிய பற்பல அறிஞர் கேட்கும்படி தாம் இயற்றிய திருக்குறள் என்னும் சீரிய நூலை அரங்கேற்றினர். அந் நூலில் கூறப்பட்டுள்ள அரிய பொருள்களை யெல்லாம் செவி மடுத்திருந்த பாண்டியன் முதலிய பலரும் திருவள்ளுவரது பேரறிவின் திறத்தைப் பெரிதும் வியந்து பேரானந்த முற்றனர்.

பின்பு, திருவள்ளுவர், ஔவையார், இடைக்காடர் முதலிய பலர் தம்மைச் சூழ்ந்து வர, பொற்றாமரைத் தீர்த்தத்தின்கண், சங்கப் பலகையின்மீது தருக்குடன் அமர்ந்திருந்த நக்கீரர் முதலிய சங்கப் புலவர்கள்பாற் சென்றார். அப் புலவர்கள் தம்மெதிரில் வந்து நின்ற திரு

வள்ளுவரை நோக்கி, "உமது ஊர் எந்த வூர் ?" என்று வினவினர். அப்பொழுது திருவள்ளுவர்,

"எந்தவூ ரென்றீ ரிருந்தவூர் நீர்கேளீ
ரந்தவூர் செய்தி யறியீரோ—வந்தவூர்
முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமா
யப்பாலும் பாழா டறும்,"

என ஞானார்த்த மடங்கிய வொரு வெண்பாவைக் கூறினார்.

பின்னர், ஔவையார் சங்கப் புலவர்களை நோக்கி, கைச் செய்கையால், "இவை யென்ன ?" என்று கேட்டார். உடனே சங்கப் பலகைமிசை யிருந்தோருள் ஒருவன்,

"இஃவளவு கண்ணிணை யிவ்வளவு சிற்றிடையாள்
இவ்வளவு போன்ற விளமுலையா—ளிவவளவாய்க்
காமத் தலைவனையுங் காணாது கன்றினாள்
நாமத்தை நாட்டுகுறி நன்கு,"

என வொரு வெண்பாவால் விடை பகர்ந்தான். ஔவையார், அச் சங்கப் புலவனது விடை சரியன்றெனக் கூறி, தாமே தமது வினாவிற்கு விடையளிக்கக் கருதி,

"ஐய மிடுமி னறநெறியைக் கைப்பிடிமின்
இவ்வளவே னும்மனத்தை யிட்டுண்மின்—றெய்வம்
ஒருவனே யென்ன வுணரவல் லீரேல்
அருவினைக ளோந்து மறும்,"

என்று பாடினார்.

திருவள்ளுவர், ஔவையா ராகிய இருவரது திறனைக் கண்ட சங்கப் புலவர்கள் மனத்திடை நடுக்கமுண்டாயது. பின்பு, சங்கப் புலவர்களில் ஒருவன் இடைக்காடருடன் சிறிது நேரம் சிற்சிலவற்றைப் பற்றிப் பேசினான். அப்பொழுது இடைக்காடர்,

"ஆற்றங் கரையி னருகிருந்த மாமரத்திற்
காக்கை யிருந்துகஃ கஃகெனக் —காக்கைதனைப்
பெய்யக்கோ லில்லாம் லிச்சிச் செனவெய்தான்
வையக்கோ னார்தம் மகன்,"

என வொரு கடினமான வெண்பாவைப் பாடினூர். அவ் வெண்பாவைக் கேட்ட சங்கப் புலவர்கள், 'இன்று நம் பால் வந்துள்ள இம் மூவரையும் நாம் வெல்லுதல் அரிது,' எனத் தமக்குள்ளே துணிந்தனர்.

பின்பு, சங்கப் புலவர்கள், திருவள்ளுவர் ஓர் அரிய நூலையியற்றிக் கொண்டு வந்துள்ளார் என்பதையுணர்ந்து, அப் பெரியாரை நோக்கி, "நாங்கள் இருக்கும் இப் பலகை குற்ற மற்ற சிறந்த தண்டமிழ் நூற்கும் இடங் கொடுக்கும். ஆதலால் உமது நூலை இப் பலகையின்மேல் வையும். இஃது உந்தம் நூலை மேற் கொள்ளுமாயின், நாங்களும் உமது நூலை மேற்கொண்டு மகிழ்வோம்," என்றனர்.

உடனே திருவள்ளுவர் தாம் இயற்றிய திருக்குறளைச் சங்கப் பலகைமீது வைத்தார். உடனே அப் பலகை தன்மீது தருக்குடன் வீற்றிருந்த புலவர்களை யெல்லாம் பொற்றுமரைக் குளத்தில் வீழ்த்தி, திருக்குறள் என்னும் விழுமிய நூலின் அளவாகச் சுருங்கி, அந் நூற்கு மாத்திரம் இடந் தந்தது. அவ்வற்புதச் செயலைக் கண்டோர் அனைவரும் பெரு வியப்புற்றனர். சிலர், திருவள்ளுவரது நூலே தமிழ் மறை எனப் புகழ்ந்து கூறினர்.

பின்னர், பொற்றுமரைக் குளத்தில் விழுந்து வருந்திய சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மரும் கல்விச் செருக்கற்றுப் பெரு நாணமுற்றுக் கரையேறி வந்து திருவள்ளுவரையும் அவரது திருக்குறள் என்னும் நன்னூலையும் புகழ்ந்து நாற்பத்தொன்பது வெண்பா பாடினர். அது திருவள்ளுவ மாலை யென்னும் பெயருடன் வழங்கப் பெற்று வருகின்றது. இவ்வளவும் கன்ன பரம்பரைக் கதையே.

இருமொழிப் புலவர் தி. செல்வக்கேசவ ராய முதலி யார் சங்கத்தின் அழிவைப் பற்றியும் திருவள்ளுவ மாலையைப் பற்றியும் கூறியுள்ளதைக் கீழே காண்க :—

“ இனி, ‘இடையாலும் கடையாலும சங்கம் அழிவ தாக,’ அஃதாவது, இடைக்காடராலும் திருவள்ளுவ ராலும் மதுரையிலுள்ள கடைச் சங்கம் அழிவதாக என்னுஞ் சாப வார்த்தைக்குப் புலவர்களுடைய கர்ண பரம்பரை யன்றித் தக்க சான்றுகள் பிற இல்லை. உள்ள சான்றுகள் எல்லாம், வள்ளுவர் தமது நூலை அரங்கேற்றிய பின்னரும் சங்கம் செழிப்புற்றிருந்ததற்கே ஆதார மாகின்றன. அவைகளை யீண்டு விரிப்பதாயின், இந்த வியாசமும் விரிவுறும், பொழுதும் இல்லை. திருவள்ளுவ மாலையில் பாயிரங் கூறிய புலவர்கள் அனைவரும் ஏக காலத் தில் இருந்தவரு மல்லர். புற நானூறு முதலானவற்றின் சார்பைக் கொண்டு ஆராயு மிடத்தில், பதின்மர், பன் னிருவர் ஏக காலத்தவராக இருத்தல் கூடும் என்பது தெளியப் படுகின்றது. எங்ஙனமாயினும், சங்கப் புலவர் கள் ஒரோர் காலத்தில் திருக் குறட்குக் கூறிய பாயிரத் தைப் பின் எவரோ ஒருவர் திருவள்ளுவ மாலையாகத் தொகுத்தனர் என்பதே தேற்றம்.”

திரு. சோமசுந்தர பாரதியார், M.A., B.L., அவர்கள் செய்த உபந்நியாசத்தின் விரி :—

“கடைச் சங்கத்தின் கடைக் காலத்திற் சங்கப் புலவர் இறுமாப்பை யடக்கின அவதார புருடர் வள்ளுவர் என்பார் பலர். இறவாப் புகழுடைய தம் குறணூலைக் கடைச் சங்கத்தில் அரங்கேற்ற வந்த வள்ளுவரைப் புறக் கணித்து, அவர்தம் அரிய நூலையும் அவமதித்த சங்கத் தாரை வள்ளுவர் தம் தெய்வீகத் தன்மையாற் பொற்று மரைக் குளத்தில் வீழ்த்தி அலமரச் செய்ததாயும், புல வர்கள் வள்ளுவரையும் அவர்தம் குறணூலையும் புனைந்து

பாடித் தம்முயிரை இரந்து பெற்றதாயும், குறட்புகழின் பிறப்பே சங்கப் புகழின் இறப்பாக முடிந்த தென்றும் கதைப்பார் பலர் கதைக்கின்றனர்.

சில தலைமுறையாகப் புலைமை இரத்தக் கலப்புடைய பார்ப்பான் ஒருவனுக்கும் தெளியாப் பிறப்பும் புலைக் குடி வளர்ப்பும் பெற்ற கீழ் மகள் ஒருத்திக்கும் பிறந்த சிறார் எழுவருள் கடை மகவே வள்ளுவரென்றும், குறி சொல்லு பவரும் பறையருக்குப் புரோஹிதருமான வள்ளுவ வகுப் பினரால் வளர்க்கப் பெற்றமையின் வள்ளுவர் என்பது இவர்க்குக் காரணப் பெயராயிற்றென்றும், இவர் மயிலாப் பூர் வணிகனாய ஏலேல சிங்கனால் வறுமை வருத்தங்கள் நீக்கப் பெற்று வாசுகி யென்னும் வேளாண் மகளை மணந்து வாழ்ந்து, மதுரைச சங்க விறழித்துப் பேறு பெற்றாரென்றும் தற்காலக் கதைகள் கேட்கின்றோம். இவற்றுள் ஒன்றுக் கேனும் பழ நூல் ஆதரவு இருப்ப தாகத் தெரிய வில்லை. கிடைக்குஞ் சில பண்டைக் குறிப் புக்களும் இக் கதைகளின் பொய்ம்மை குறிக்கக் காண்கின் றோம்.

வள்ளுவமாலை உள்ளபடி கடைச்சங்கப் புலவரால் பாடப் பட்டதுதானா? என்ற வினா நிற்க; அப் புலவர் பாக்களே வள்ளுவ மாலை யெனக் கொள்ளினும், அவை களிற் சங்கப் புலவர் வள்ளுவரை அவமதித்து, அவரால் வீறடக்கப் பட்டதற்கேனும், அவர் தம் இறவாக் குற ளூல் அப் புலவர் முன் அரங்கேற்றப் பட்டதற்கேனும், ஆன்ற சான்று ஏதும் சுட்டப் படக் காணோம். கடைச் சங்கப் புலவரால் பாராட்டிச் சேமித்து வைக்கப்பட்ட நூற்றிரட்டுக்களுள் அப் புலவர் சிலர் புனைந்துரைத்த பாக்கள் காணப்படுகின்றன. கடைச சங்கத்தார் நூற் றிரட்டுக்களில் திருக்குறளும் ஒன்றென்பது தமிழர் யாவர்க்கும் ஒப்ப முடிவதாகும். அத்திரட்டு நூல்களுள்

ளும் வள்ளுவர் நூல் தலை சிறந்ததென்பதற்கு இடை நெடுங்காலம் பிற பல நூலும் வழக்கிழந் தொழியவும், என்றும் பிரபல நூலாகக் குறள் நின்று நிலவியதே போதிய சான்றும்.

திருவள்ளுவ மாலையில் வள்ளுவர் கடைச் சங்கத்தின் வீறழித்த கதை சுட்டுங் குறிப்பு ஒன்றேனும் இல்லை.

கடைச சங்கக் கடை நாளிற்றேன்றித் தம் குறணூல் அரங்கேற்றுதலினிடையே வள்ளுவர் மதுரைச் சங்கத் தையழித்த கதை மெய்யாமேல், புலவர் சங்கமிருந்து இயற்றிய பழம் பனுவல்களிற் குறளடிகள் குறிக்கப் படக் காரணமில்லை. மூன்றுஞ் சங்கப் புலவர் நூல்களி லும் குறிக்கப்படக் கூடாத பின் வந்த திருக்குறள் அருந் தொடர்கள் அச் சங்கத்தாருக்குப் பல நூற்றுண்டு களுக்கு முன் எழுந்து அவரால் பாராட்டிச் சேமித்துப் பாதுகாக்கப்பட்ட பழந் தொகைப் பனுவல்களிற் சுட்டப் படுமாறில்லை யென்பது ஒருதலை. ஆனல் மதுரைச் சங்கச் சதுரர் நூல்கள் பலவற்றுள்ளும், அவர் போற்று தற்கான அவருக்கு முற்பட்ட மிகப் பழைய தமிழ்த் திரட்டு நூல்களுள்ளும் வள்ளுவரும் அவர் அற நூலும் பல வேறிடங்களிலும் பாராட்டப் பட நாம் காணுங்கால், வள்ளுவரைப் பாராட்டி யெடுத்தாளும் பாவலருக்கு ஒன்று அவர் சம காலத்தவராதல் வேண்டும்; அன்றேல், முன்னவராதல் வேண்டுவதன்றிக் காலத்தாற் பிந்தியவரா கக் கருதற் கிடமில்லை. தமக்கு முற்பட்ட இடைச் சங்கச் செய்யுளும் பிறவுஞ் சேர்த்துக் கடைச் சங்கத்தார் திரட் டிய புற நானூறு முதலிய பழைய நூல்களிலும் குறளை மதிப்புடன் எடுத்தாளக் காண்கின்றேம். குறளடிகள் இவ்வாறு கடைச்சங்கப் புலவராலும் அவர்க்கு முற்பட்ட புலவராலும் எடுத்தாளப் பட்டவை மட்டுமில்லை. குறள் வாக்கியங்கள் அறத் தெய்வக் கூற்றுயும், வள்ளுவர்

மெய்த் தெய்வப் புலவராயும் அவர் பலராலும் வாயார வாழ்த்தப் படவும் காணும் நாம், வள்ளுவர் அவர்க்குச் சம காலத்தவர் என்று கொள்ளுதலினும் அவர்க்கு முற்பட்டவராகக் கருதுதலே சால்புடைத்தாம். புலவர் எவரும் தம் காலத்தவரால் தலை நின்ற தேவ நாவலராய் மதிக்கப்படும் வழக்கம் இல்லை. பெரும்பாலும் சம காலத்தவர் அவமதிப்பும், தாமியற்றிய நூலின் மெய்ப் பெருமை வலியாற் பிற்காலத்தவரால் மேம்பாடும் அடைவதே புலவருலகியல்பு. தெய்வப் பாவலராக வள்ளுவரைப் பழஞ் சங்கப் புலவர்கள் கூறுவதால் அவர் தமக்கு வள்ளுவர் நீண்ட காலத்துக்கு முற்பட்டவராகவும், அவர் அறநூலின் இறவாச் சிறப்பு அங்கீகரிகக் படுதற்குப் போதிய அவகாசம் அக்குறளுக்கும் அதனடிகளைப் பாராட்டி எடுத்தாளும் சங்கப் பனுவல்களுக்கும் இடையே ஏற்பட்டிருக்கவும் வேண்டும். இது சம்பந்தமாய்த் திருக்குறள் அடிகளைச் சிந்திக்கச் செய்யும் சில சங்கச் செய்யுட் டொடர்களை யீண்டுக் குறிப்போம்:—

‘ தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின
தன்னெஞ்சே தன்னைச் சுடும்,’

என்னுங் குறளோடு,

‘ நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினு மறையாவா
நெஞ்சத்திற் குறுகிய கரியில்லை யாகலின,’

என்ற நெய்தற் கலிச் செய்யுட்டொடரின் நெருக்கமும் இயைபும் சிந்திக்கத் தக்கன.

‘ கோட்டுப்பூப் போல மலர்ந்துபிற் கூம்பாது,’
என்னும் நாலடிச் செய்யுள்,

‘ உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு,’

என்னுங் குறள் விளக்க மென்பது கூறாதே போதரும்.

‘இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நல்ல செயல்,’

என்ற தேவர் குறளுக்கும்,

‘இல்லாளை யஞ்சி விருந்தின முகங்கொன்ற நெஞ்சிற்
புல்லாள னாக * * *,’

என்ற தேவர் சிந்தாமணிக்கும் உள்ள இயைபு வெளிப்படை.

‘பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்,’

என்னுங் குறளை,

‘முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின
நஞ்சு முண்பர் நனிநா கரிகர்,’

என்னும் நற்றிணைச் செய்யுளடி நினைவூட்டுகின்றது.

‘தோழிநாம் காணுமை யுண்ட கடுங்கள்ளை மெய்கூர
நாணுது சென்று நடுங்க வுரைத்தாங்குக்
கரந்ததூஉங் கையொடு கோட்பட்டாங் கண்டாய்,’

என்னும் முல்லைக் கலியின் பதினைந்தாவது செய்யுளின் அடிகள்,

‘களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும்,’
‘நிறையரியர் மனனளிய வென்னுது காம
மறையிறந்து மன்று படும்,’

என்னுங் குறளிணைகளின் பிணையலாகும்.

‘பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்,’

என்னுங் குறளைக் குறிக்கும்,

‘வரிசை யறிதலோ வரிதே பெரிதும்
ஈத லெளிதே மாவண் டோன்றல்
அதுநற் கறிந்தனை யாயிற்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே,’

என்னும் புறப்பாட்டடிகள் கருதத்தகும்.

'பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்,'

'ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்,'

என்னுங் குறட் கருத்துக்களை,

'அற்றது பற்றெனி லுற்றது வீடு,'

'...இன்ப துனபங்கள் செற்றுக களைந்து பசைபற்றறால்
அன்றே யப்போதே வீடும் அதுவே வீடு வீடாமே,'

என்னுந் திருவாய்மொழிப் பாசுரங்கள் வற்புறுத்தக் காண்கின்றோம்.

'அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல்,'

என்னுங் குறளடிக்கும்,

'ஊற்றறைக் குழியிலமுதுகுத் தாங்கு,'

என்னும் பெரியாழ்வார் திருமொழிக்கு முள்ள இயைபு நோக்கத் தக்கது.

'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேராய்,'

என்று சாத்தனார் மணிமேகலையுள் எடுத்தாண்டுள்ளார். இது போலவே,

'நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம் பாடிற்றே யாயிழை கணவ,'

என்னும் புறப்பாட்டடிகளில்,

'எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு,'

என்னுங் குறள் ஆட்சி பெறுகின்றது.

இன்னும் இத்தகைய மேற்கோள் வாக்கியங்கள் பல எடுத்துக் காட்டலாமாயினும் ஈங்கு இவை போதியவாம். இவ்வாறு உரையொடு பொருளும் உறழும் பல விடங்களையும் காட்டு மிடத்துக் குறளாசிரியரே அவற்றைப் பிற நூல்களினின்றும் இரவல் கொண்டிருக்கலாகாதோ வெனின், இவ் வாக்கியங்களின் பொருளுக்கும் நடைப் போக்கும் உற்று நோக்குவார்க்குக் குறளே பிற நூலுடையாருக்கு மேற் கோளாதல் வெள்ளிடை மலையாம். அன்றியும், சாத்தனார் மணிமேகலையில், 'பொய்யில் புலவன் பொருளுரை,' எனவும், ஆதனூர்க் கிழார் புறப்பாட்டில், அறம் பாடிற்றே, எனவும் முறையே குறளைப் பாராட்டிப் பாடக் கண்டு வைத்தும், குறளாசிரியர் பிற நூலினின்று இரவல் கொண்டாரெனக் கூறுதல் சிறிதும் பொருந்தாக் கூற்றும். எனவே, சங்கப் புலவர் பலராலும் எடுத்தாளப்படும் குறள் அவர் தமக்குக் காலத்தான் முந்தியதாதல் ஒரு தலை."

# நான்காம் இயல்

## திருவள்ளுவர் மனை மாட்சி

திருவள்ளுவர் தம் மனைவியாகிய வாசுகி யென்பாளுடன் கூடி இல்லறத்தைச் செவ்வனம் நடத்தி வருகையில், ஒரு நாள் ஒருவர் திருவள்ளுவரிடஞ் சென்று, "பெரியீர், உலகில் இல்லறம் சிறந்ததா, துறவறம் சிறந்ததா?" என்று கேட்டார். திருவள்ளுவர் அவ்வினுவிற்கு விடையளிக்காமல் வாளாவிருக்க, உண்மையை யுணர்ந்து செல்ல வந்தவர், திருவள்ளுவர் வீட்டிலேயே பல நாள் இருந்தார்.

ஒரு நாள், திருவள்ளுவர், வாசுகி யென்பாள் கிணற்றினின்று, நீரை யெடுத்துக் கொண்டிருக்கையில், அவளை

யழைத்தார். அவ்வமயம் அம்மங்கை பாதிக் கிணற்றள வில் தூக்கின குடத்தை அப்படியே நிற்கும்படி விட்டுத் தன்னுயகன்பால் விரைந்து வந்தாள். உண்மையை யுணர்ந்து செல்ல வந்தவர் அவ்வற்புத நிகழ்ச்சியைக் கண்டு பெரிதும் வியந்தார்.

மற்றொரு நாள், வாசுகி யென்னும் வனிதை திரு வள்ளுவர்க்குப் பழையது இட்டனள். அப்பொழுது அப் பெரியார், தம் மனைவியை நோக்கி, "மடவாரல், இவ் வன்னம் சுடுகின்றது," என்றார். உடனே, அக் கற்பரசி தன் நாயகனது உளக் குறிப்பை யுணர்ந்து, விரைந்து சென்று, விசிறி கைக்கொண்டு வந்து அவ் வன்னத்தை விசிறினள். திருவள்ளுவரது வீட்டில் உண்மையை யுணர்ந்து செல்ல வந்து தங்கி யுள்ளவர், 'இவளல்லளோ கொண்டான் குறிப்பறிந் தொழுகுபவள்! இத்தகைய மனைவி யெல்லோர்க்கும் கிடைத்தல் அரிது,' என வாசுகி யம்மையின் நற்குணத்தைப் புகழ்ந்தனர்.

வேறொரு நாள், திருவள்ளுவர், பகற் பொழுதில் நெய்தற் றொழில் செய்து கொண்டிருந்தார். அப்பொழுது அவரது கையிலிருந்த குழல் தவறிக் கீழே வீழ்ந்து விட் டது. அப் பெரியார், அவ்வமயம் தம் மனைவியை நோக்கி, "மடந்தாய், ஒரு விளக்கைக் கொண்டுவா," என்று கட் டளை யிட்டார். உடனே அக் கற்புடை மங்கை விரைந்து சென்று விளக்கொன்றைக் கொணர்ந்தாள்.

திருவள்ளுவரிடம் வந்து இல்லறம், துறவறம் என் னும் இரண்டனுள் சிறந்ததைத் தெரிந்து கொள்ள விரும் பியவர், வாசுகி யென்பாளின் சீரிய வொழுக்கத்தைக் கண்டு, 'இம்மங்கையர்க் கரசியைப் போன்ற கற்பிற் சிறந்த காரிகையை மனைவியாகப் பெறும் ஒருவற்கு இல் லறம் சிறந்தது. ஏனையோர்க்குத் துறவறமே சிறந்தது,' எனத் தாமே யுணர்ந்து கொண்டு, திருவள்ளுவரையும்

அவருடைய மனைவியாகிய வாசுகியையும் வணங்கி அவர்களிடம் விடை பெற்றுச் சென்றார்.

ஒரு கால் கொங்கண முனிவர் தவஞ் செய்து கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு கொக்கு அவர்மீது எச்சமிட்டது. அதனைப் பொறாது அம் முனிவர் அக் கொக்கைக் கனலெழ விழித்து நோக்கினார். உடனே அக் கொக்கு அம் முனிவரது தவ வன்மையால் எரிந்தொழிந்தது.

கொக்கு யெரிந்து விட்டதைக் கண்ட கொங்கண முனிவர் தமது தவம் சித்தி புற்றதெனக் கருதிச் செருக்குற்றிருந்தார். பின்னர், ஒரு நாள் அம் முனிவர் வள்ளுவர் மனைக்குச் சென்று அன்ன மிரந்தார். அப்பொழுது வாசுகி யென்பாள் தன் கொழுநராகிய திருவள்ளுவரது திருப்பணியைச் செய்து கொண்டிருந்தமையால், சிறிது நேரங் கழித்து அன்ன மிடுதற்கு வந்தாள்.

விரைந்து வாராது சிறிது நேரங் கழித்து அன்னங் கொண்டு வந்த வாசுகி யென்பாளைக் கொங்கண முனிவர் கனலெழ விழித்து நோக்கினார். அப்பொழுது அக் கற்பரசி, வெகுண்டு நோக்கிய முனிவரைப் பார்த்து, "கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா?" என்றனள். உடனே தவ வன்மையால் தருக்குற்றிருந்த அம் முனிவர் திடுக்கிட்டுத் திருவள்ளுவருடைய வாழ்க்கைத் துணைவியது கற்பின் திண்மையைக் கண்டு அஞ்சிச் சென்றார் என்பது கன்னபரம்பரைக் கதை.

ஒரு நாள் மாலை, திருவள்ளுவர் தாம் நெய்த ஆடையை விற்கும் பொருட்டுக் கடைத் தெருவிற்குப் போய் அவ்வாடையைக் கையிற் பிடித்துக் கொண்டு நின்றார். அப் பெரியாரது திருக்குறளைப் படித்த ஓர் இளைஞன், திருக்குறளிற் கூறியுள்ளபடி திருவள்ளுவரிடம் ஒழுக்கம் உளதாவென்பதை ஆராய்வான் எண்ணி, அப் பெரியாரை நண்ணி,

"இவ்வாடையின் விலை யென்ன?" என்றான். அப் பேரறிவாளர், "இத் துணியின் விலை ஒரு பணம்," என்றார். பின்பு, அச் சிறுவன் அத் துணியை வாங்கி யிரண்டாய்க் கிழித்து, "இப் பாதித் துணியின் விலை யென்ன?" என்று திருவள்ளுவரைக் கேட்டான். அப்பொழுது அப் பொறையாளர், "இவ்வாடையின் விலை யரைப் பணம்," என வமைதியுடன் கூறினர். பின்னரும் அக் குறும்புடைச் சிறுவன் அப் பாதித் துணியையும் பாதியாகக் கிழித்து, "இப்பொழுது இத் துணியின் விலை யென்ன?" என்று திருவள்ளுவரை வினவினன். அப்பொழுதும் திருவள்ளுவர் பேரமைதியுடன், அச் சிறுவனை நோக்கி, "இளைஞ, இவ்வாடையின் விலை காற்பணம," என்று கூறினர். பின்னர், திருவள்ளுவரைப் பரிசோதிக்க எண்ணி வந்த சிறுவன் அப் பெரியாரது பேரடக்கத்தைக் கண்டு பெரிதும் வியந்து சென்றான்.

அங்ஙனஞ் சென்ற சிறுவன் தனது அறிவின்மையால் திருவள்ளுவரை மீண்டும பரிசோதிப்பான் கருதி, அவரது இல்லஞ் சென்று, வாசுகி யென்பாளை வீண் சண்டைக்கிழுத்து அம் மங்கையின் மனத்தை வருத்தத் தொடங்கினன். அறிவிலியாய் விளங்கிய அச் சிறுவனது புன்றொழிலைக் கண்ட திருவள்ளுவர் செய்தற்றொழிலை விட்டெழுந்து வந்து அச் சிறுவனை நையப் புடைத்தார்.

அக்காலை, அச சிறுவன் திருவள்ளுவரை நோக்கி, "அறிவுடைப் பெரியீர்,

"அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்த றலை,"

என்று நீர் கூறிய குறளின்படி உம்மிடம் ஒழுக்கத்தைக் காணேமே!" என்றான்.

அப்பொழுது திருவள்ளுவர், அச் சிறுவனை நோக்கி, "ஐய, நீ திருக்குறள் முழுவதையும் ஆழ்ந்து படிக்கவில்லை போலும்!

'செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்,'

என்ற குறளை நீ படித்திருந்தால், இப் புன்றொழில் புரிந்திருக்கமாட்டாய்," என்றிடித் துரைத்தார். அவ்வறிவிலாச் சிறுவன் தன் குற்றத்தை யுணர்ந்து திருவள்ளுவரை வணங்கிச் சென்றான். இதுவும் கன்ன பரம்பரைக் கதையே.

ஒரு நாள் திருவள்ளுவர் வெளிச் சென்றிருந்த பொழுது, ஒரு சித்தர் அவரது வீட்டிற்கு வந்து அக் குடிசையை அழகியதோர் அரண்மனை யாக்கிச் சென்றார். பின்னர், திருவள்ளுவர் வீட்டிற்குத் திரும்பி வந்து, தமது குடிசை யரண்மனையாய் இருத்தலைக் கண்டு, "ஆட்கொல்லி யிருக்குமிடத்து நாமிருக்கலாகாது," எனத் தம் மனைவியிடங் கூறி, அவ்வம்மையை யழைத்துச் சென்று, வேறொரு குடிசையை யமைத்துக்கொண்டு அதனிற் றங்கி யிருந்தார்.

சில நாட்களுக்குப் பின்னர், குடிசையை யரண்மனை யாக்கிச் சென்ற சித்தர் திருவள்ளுவரைக் காண்பான் விழைந்து தாமியற்றிய அரண்மனைக்கு வந்தார். அங் குறைந்திருந்தவர்கள் திருவள்ளுவர் அண்மைக்கண் அமைந்துள்ள ஒரு குடிசையில் உறைவதை அச் சித்தர்க்குக் கூறினர்.

திருவள்ளுவரது மன நிலையை யுணர்ந்து பெரிதும் வியந்த சித்தர், திருவள்ளுவரிருக்கும் குடிசைக்குச் சென்று, அவரைக் கண்டு, அவருடன் தனியிடத்தில் தத்துவங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்த பொழுது,

அவர் பெய்த மூத்திரம் பட்ட கல்லொன்று மாற்றுயர்ந்த பொன்னாயினமையைக் கண்டு, 'நம்மினும் பெருஞ் சித்தராய் விளங்கும் இப் பெரியார்க்கு நாம் அரண்மனை யமைத்துக் கொடுத்தோமன்றோ!' எனத் தாஞ் செய்த காரியத்தை யுன்னி வெட்கிச் சென்றார் என ஒரு கதை வழங்குகின்றது.

ஒரு நாள் திருவள்ளுவர் தம் மனைவி பொற்கலன்களின்மேல் விருப்புற்றிருப்பதை யுணர்ந்து, அவ்வம்மையின் வியர்வை நீரால் கற்கூரையில் வெந்து கொண்டிருந்த மட்கலங்களை யெல்லாம் பொற்கலங்களாக்கிக் காட்டி, "உனதுடம்பின் வியர்வை நீரே மட்கலங்களை யெல்லாம் பொற்கலங்க ளாகக்கும் தன்மையதா யிருக்க, நிற்குப் பொன்னகை யேன்?" எனக் கூறிப் பின்னர்ப் பொன்னால் மக்கட்கு வரும் இடுக்கணை யெல்லாம் எடுத்தியம்பினர்.

திருவள்ளுவர் இங்ஙனம் வாசுகி யென்னும் கற்பரசியுடன் கூடி நீண்ட நாள் இல்லறத்தை யினிது நடத்தி உலகிடைப் பொன்றாப் புகழை நிறுவினர்.

திருவள்ளுவர் ஆருயிர்த்துணைவியாகிய வாசுகி யென்பாள் தன்னிறுதிக் காலத்தில் தன்னுடைய கொழுநரது திருமுகத்தை நோக்கினாள். அப்பொழுது அவர், "அன்புடைப் பாவாய், நீ விரும்புவது யாது?" என்று கேட்டார். அப்பொழுது, அக் கற்பரசி, திருவள்ளுவரது திருமுகத்தை யன்புடன் நோக்கி, "இன்னுயிர்த் தலைவரே, என்னை நீர் திருமணஞ் செய்து கொண்ட நாளிலிருந்து யான் உமக்கு அன்ன மிடுகையில், உமது கட்டளைப்படி ஒரு சிறு கலத்தில் சிறிது நீரையும் ஓர் ஊசியையும் இட்டு உம்மருகில் வைத்து வந்தேன. அவ்வண்ணஞ் செய்யும் படி நீர் எனக்குக் கட்டளை யிட்டதின் காரணத்தை யறிய என் மனம் விழைகின்றது," என்றாள். அப்

பூதம், மங்கலம், மந்திரி, மதி, மணி, மாத்திரை, மாயம், மானம், முகம், முத்தம், யாமம், வித்தகர், தேயம், தேவர், நாகம், நாகரிகம், நாமம், பருவம், பாகம், பாக்கியம், பாவம், கருமம், கனம், காமம், காரணம், குணம், குலம், கோடி, சலம். ஞானம், தண்டம், தவம், தானம், துலை, தெய்வம், இலக்கம், இந்திரன், ஆயம், ஆசாரம், ஆதி, ஆகுலம், அவி, அந்தம், அமரர், அமிர்தம், அங்கணம், அதி (நுட்பம்) முதலியன.

சீத்தலைச் சாத்தனார்க்குத திருவள்ளுவரது திருக்குறளால் தலைக்குத்துத் தீர்ந்த கதை பன் முறையும் கேள்விப்பட்டிருக்கின்றோம். இக் கதை முழுவதும் தலைக் குத்து என்னுந் தொடருக்கு இரண்டு பொருள் இருத்தலாலும், சீத்தலை யென்பது ஓரூர் என அறியாமற் போனமையினாலும ஏற்பட்டதாகும்.

'சிந்திநீர்க் கண்டம் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில்—காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.'

இச் செய்யுளில் தலையிடி மருந்து கூறப்பட்டிருக்கின்றது. இம் மருந்தினை மோந்த மாத்திரையில் தலையிடி தீர்ந்து விடும். குற்றம் நிரம்பிய நூல்களைத் தினந்தோறும் செவிமடுத்து என்றுந் தீராத தலையிடி யுடையராயிருந்த சாத்தர்க்கு வள்ளுவரது முப்பாலால் அந் நோய் தீர்வெய்திற்று என்பதே யிதன் கருத்து. இச் செய்யுளகத்துத் தலைக்குத்து என்ற சொல் பயின்று வந்திருத்தலால், குற்றமுள்ள நூல்களைக் கேட்குந்தோறும் கேட்குந்தோறும் சாத்தர் எழுத்தாணியைக் கொண்டு தம் தலையிற் குத்தித் தமது விதியை நொந்துகொள்வார் என்றும், சீத்தலைச் சாத்தர் என்ற பெயர் வழக்குண்மையால், எழுத்தாணியாற் குத்துண்ட அவர் தலையிற் சீழ் எப்போதும் வடிந்து

கொண்டிருந்ததென்றும், இச் சீழ் வடிதலும் எழுத்தாணிக் குத்தும் வள்ளுவரது முப்பால மருந்தினால் அறவே யில்லாது போயின வென்றும் கட்டுக் கதைகள் கிளைக்கத் தலைப்பட்டன.

இது போன்றதொரு தப்புணர்ச்சியின் காரணமாக வள்ளுவர்க்குக் கற்பிற் சிறந்த இல்லறத் தலைவி யொருத்தியை அடையும் பாக்கியமும கிடைத்திருக்கின்றது.

'அடிசிற் கினியாளே யன்புடை யாளே
படிசொற் றவறாத பாவா—யடிவருடிப்
பின்றூங்கி முன்னெழூஉம் பேதையே போதியோ
என்றூங்கு மெனக ணிரா,'

என்ற செய்யுள் வள்ளுவர் தமது பத்தினியாரைக் குறித்துப் பாடியதாகக் கருதப்பட்டது. இதனின்றும கற்பு மாட்சி தெரிக்கவல்ல அழகிய பல கதைகள் புறப்பட்டு விட்டன. ஆனால் இச் செய்யுள் வள்ளுவர் வாக்கன்றென்பதற்கு இச் செய்யுளகத்தே பொய்யாத வோர் சான்று நிலை பெற்றிருக்கின்றது. தூங்குதல் என்ற சொல்லுக்கு உறங்குதல் என்ற பொருள் வள்ளுவர் காலத்தில் இல்லை. சங்க நூல்களில் ஓரிடத்தேனும் இப்பொருளில் இச் சொல்லைக் காணுதல் கூடாது. வள்ளுவர் தாமும் இச் சொல்லைப் பலமுறை பிரயோகித்திருக்கின்றார்; பொருள் இதுவன்று. தூங்காமல் தூங்கிச் சுகம் பெற்றுச் சோம்பி யிருந்த பிற்காலத்தே புகுந்த வழக்காகும் இது. பிற்காலத்துப் பிறந்த செய்யுளை வள்ளுவர்பால் ஏற்றி அவர்களுக்குத் திருமணம் நிகழ்த்தப் பட்டிருக்கின்றது."

# ஐந்தாம் இயல்

## திருவள்ளுவர் மதம்

" இத் திருக்குறளை இயற்றியருளிய ஆசிரியர் இன்ன சமயத்தினர் என்று துணிந்துரைப்பது இயலாது. இவர் எச் சமயத்தினராயினு மாகுக;

'ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி,'

என்றும்,

'மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப் பொழுக்கங் குன்றக் கெடும்,'

என்றும்,

'அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்,'

என்றும்,

'இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு,'

என்றும்,

'முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்,'

என்றும்,

'ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்,'

என்றும் வருவனவற்றால் இவர் பொதுப்பட இந்து மதத்துக் குட்பட்டவர் என்பது துணிவு. ஆயினும் முதற்பாலில் முதற் குறளில் விஷ்ணுவுக் குரிய பகவன் நாமத்தை உரைத்தமையாலும், இரண்டாவது பாலில்,

'மடியிலா மன்னவ னெய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லா மொருங்கு,'

மன நிலங் கடந்த நெடுமுடி யண்ணலைக் குறித்தமையா லும் மூன்றாவது பாலில்,

'தாம் வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு,'

எனப் பரம பதத்தைக் குறித்தமையாலும், வள்ளுவர் வைணவர் என்பார். வைணவர், 'அகாரார்த்தோ விஷ்ணு,' என்ற கருத்தை, 'அகரமுதல வெழுத்தெல்லாம்,' எனத் தழுவியிருப்பதும் வள்ளுவர் வைணவர் என்பதை வலி யுறுத்து மென்பர்;

'குறுமுனிவன் முத்தமிழும் என்குறளும் நங்கை
சிறு முனிவன் வாய்மொழியின் சேய்,'

என்று திருவள்ளுவரே கூறினதாகக் கூறும் ஒரு தனிப் பாடலையும் ஆதாரங் காட்டுகின்றனர்.

'ஊரவா கௌவை யெருவிட் டன்னைசொன் னீர்படுத்து,'

என்னும் 43-வது திருவாய் மொழியின் நாலாவது பாசுர மும்,

'ஊரவர் கௌவை யெருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்,'

என்னும் குறளும்,

'கண்டுகேட் டுற்றுமோந் துண்டுழலு மைங்கருவி
கண்டவின்பம் தெரிவரிய வளவில்லாச் சிற்றின்பம்
ஒண்டொடியா டிருமகளு நீயுமே நிலாநிற்ப,'

என்னுந் திருவாய் மொழியும்,

'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள,'

என்னும் குறளும, ஒன்றை யொன்று அடி யொற்றிக் கொண்டாற்போலே யிருப்பதும், வளளுவர் வைணவர் என்னும் வைணவர்க் குற்ற சான்றாம்.

'எண் குணத்தான் தாளை வணங்காத்தலை,' என்றது சிவபரமாதலால், சைவர்கள் வள்ளுவரைச்

சைவர் என்பர். துறவற இயலில் ஞானம் கூறும் பகுதிகள் சைவ சித்தாந்தக் கருத்துக்களை ஒத்திருப்பதும் தங்களுக்கு ஆதாரம் என்பர். 'மலர்மிசை யேகினான்,' என்றதனாலும்,

'அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று,'

என்றதனாலும், 'பூமேனடந்தான்,' என்னும் பெயரை உட்கொண்டு, 'மலர்மிசை யேகினான்,' என்றதனாலும் ஜைநர்கள் வள்ளுவரை ஜைநர் எனக் கூறிக் கொள்வர்.

'மலர்மிசை யேகினான்,' 'வேண்டுதல் வேண்டாமையிலான்,' 'பொறிவாயில் ஐந்தவித்தான்,' என்னும் புத்த தேவனது பெயர்களை யெடுத்தோதிக் கடவுள் வாழ்த்துக் கூறுதலாலும், புத்த தேவன் விதந்து கூறிய அருளறத்தினை வள்ளுவர் மிகுத்துக் கூறுதலாலும், பௌத்த பிடகத்தில் பிக்ஷுக்களுக் கென்று விதித்த விரதங்களையே துறவற இயலில் துறவிகட்கு விதித்தமையாலும், வள்ளுவர் பௌத்தர் எனக் கொள்வதற்கும் இடமுண்டு.

ஜி. யூ. போப்பையர், 'எங்கள் ஏசுநாதர் மலைமேற் செய்த ஹிதோப தேசத்தின் பிரதிசப்தமாகும் இத்திருக்குறள்,' என்பர்.

'எல்லா நூல்களினும் நல்லன எடுத்து எல்லார்க்கும் பொதுப்படக் கூறுதல் இவர்க்கியல்பு,' என்றார் பரிமேலழகர்.

எவரெவ ரெத்திறத்தர் அவரவர்க்கு அவ்வத்திறத்தவராய்த் தோன்றும் இவர் சர்வ சமய சமரசவாதி யெனல் சால்புடைத்து.

'ஒன்றே பொருளென்னின வேறென்ப வேறென்னின்
அன்றென்ப ஆறு சமயத்தார்—நன்றென்ன
எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி,'

என்றார் கல்லாடர்.'

திரு. தி. செல்வக்கேசவராய முதலியார்.

'திருவள்ளுவரை ஆருகத சமயி யென்று சிலரும் சைவ சமயி யென்று பலரும் வாதிப்பர். ஆயினும், வைதிக சாரங்களை மேற்கொண்டு நிற்கும் திருக்குறட் கருத்தை நோக்க அவரை ஆருகதரென்று சாதிக்கப் போந்த நியாயம் காண்கிலம்.'

அபிதான கோசம்.

'இவரைச் சைவரென்றும், வைணவ ரென்றும், அத்வைதி யென்றும், பௌத்த ரென்றும், சமணர் என்றும் கிறிஸ்தவர் என்றும் அவ்வவ் வகுப்பினர் கூறுகின்றனர்.

சைவர், வைணவர், அத்வைதிகள் என்பார் மூவரும ஒத்துக்கொண்டுள்ள வேள்வியை இவர்,

'அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று,'

என்றும்,

'செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி
னான்றாரோ டொப்பர் நிலத்து,'

என்றும் சிறப்பித்துடம்படுக்கூறுதலினாலும, பௌத்தர், சமணர், கிறிஸ்தவர்கள் அதனைப் பல்லாற்றானும் இழித்துக் கூறுதலினாலும், இவரது மதம் வைதிக மதமேயாம். (வேத வழித்தாய மதம் வைதிக மதமாம்.)

'அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்,'

என்னுங் குறளாலும, பிறவாற்றாலும், இவர் வேதத்தைப் பிரமாணமாகக் கொண்ட வாதி யென்பது செவ்வனே விளக்கமாம். இவர் உலகிற்குக காரணம் ஆதி பகவன் என்று கூறி யிருத்தலால், சாங்கியராதியோரும் ஆகார். சாங்கியராதியோர் கடவுளை யொப்பாது வேதத்தினைப் பிரமாண மெனக் கொண்டமையின், அவர்கள் வைதிக

நாஸ்திகராவர். உலகிற்குக் காரணம் கடவுள் என்பதை ஒப்பாத பௌத்தரும் சமணரும்,

‘அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு,’

என்று உலகிற்குக் காரணம் கடவுள் என்று கூறிய நாயனாரைத் தத்தம் மதத்தினர் என்று கூறுவதும், மறு பிறப்பையும் புலாலுண்ணாமையையும் ஒப்பாத கிறிஸ்தவர் மறுபிறப்பையும் புலாலுண்ணாமையையும் ஒப்பிய நாயனாரைத் தமது மதத்தின ரென்றுரைப்பதும் வியப்பே யாம்.

நாயனாரை வைதிக மதத்தினர் என்று கூறுவதற்குத் திருக்குறளில் தக்க வேதுக்கள் வெளிப்படையா யிருத்தல் போல, சைவரென்றாவது வைணவ ரென்றாவது அத்வைதி யென்றாவது குறிப்பிட்டுரைப்பதற்குத் தக்க ஏதுக்கள் வெளிப்படையா யின்மையின், இவரை அவருள் ஒருவ ரெனக் குறிப்பிட்டுரைத்தல் இயலாது.’

திரு. கோ. வடிவேலு செட்டியார்.

# ஆறும் இயல்

## திருக்குறளின் சிறப்பு

திருக்குறள் என்னும் பெயரிய விழுமிய நூலைப் படியா மக்கள் இந் நில வுலகிடைப் பலருளரேனும், அச் சீரிய நூலின் பெருமையை யுணரா மக்கள் சிற்சிலரே என்பதை யாவரும் அறிவர். இந் நூல் பரமார்த்த தரிசன மென்னும் பகவற் கீதையைப் போல் பல மொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டிருத்தலே இதனது சிறப்பிற் கோர் அறிகுறியாம்.

'ஆலும் வேலும் பல்லுக் குறுதி
நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி,'

என வழங்கும் பழமொழி திருக்குறளின் சிறப்பை நன்கு

வடமொழி, தென்மொழிகளில் வல்லுநராகிய சுவாமி நாத தேசிகர் தாம் இயற்றிய இலக்கணக் கொத்தென்னும் சிறிய நூலில்,

'பல்காற் பழகினுந் தெரியா வுளவேற்
றொல்காப் பியந்திரு வள்ளுவர் கோவையார்
மூன்றினு முழங்கு மாண்டினு மிலையேல்
வடமொழி வெளிபெற வழங்கு மென்க,'

எனக் கூறி யிருத்தலும், அதனுரையில், 'இலக்கண மாவது தொல்காப்பியம் ஒன்றுமே. செய்யுளாவது திருவள்ளுவரொன்றுமே,' எனக் கூறி யிருத்தலும் திருக்குறளின் சிறப்பை நமக்கு நன்கு புலப்படுத்துகின்றன.

திருக்குறளையும் இது போன்று நீதிகளைக் கூறும் நாலடியார் முதலிய வேறு நூற்களையும் ஒத்திட்டுப் படிப்போர்க்குத் திருக்குறளில் அமைந்துள்ள சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல் என்னும் அழகுகள் வெள்ளிடை மலையென விளக்க முறும்.

ஆழ முடைத்தாதல் என்னும் அழகு திருக்குறளில் இன்பப் பகுதியில் மிக்குள தென்பது பல அறிஞரது துணிபு. அவ்வழகினை யறிய விழைவோர் அப் பகுதியை யாழ்ந்தாழ்ந்து ஓதி யுணர்க.

'திருக்குறள் வீடுபேற் றுறுதிப் பொருளும் கூறிற் றோர் நூலேயாம். வீடு, சிந்தையு மொழியும் செல்லா நிலைமைத்தாகலின், இலக்கண வகையாற் கூறும் பான்மைத் தன்றென வுணர்ந்து, அதனைத் துறவற மாகிய காரணவகையாற் கூறினார். ஆசிரியர் தொல்காப்பியனார்,

'அந்நிலை மருங்கின் அறமுதலாகிய, மும்முதற் பொருட்கும் உரிய வென்ப,' எனச் சூத்திரஞ் செய்ததூஉம் இக் கருத்துப் பற்றியே யாம். வீடு பேற்றியல் நுதலி யெழுந்த வேதாந்த சித்தாந்த நூல்களும், வீட்டியற் பொருட்டிறம் சிரவணம், மனனம் என்னும் இருதிறத்தால் தடத்தமாகவும், சிரவணம், மனனம், நிதித்தியாசனம், நிட்டை யென்னும் நாற்றிறத்தால் சொரூபமாகவும் சாதன வகையாற கூறினவேயாம். திருக்குறளில் வீட்டின் சாதனம் சுருக்கமாகக் கூறப்பட்டது. இதுவே தம்முள் வேறுபாடு. இங்ஙனமாகலின், திருக்குறள், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கும் தெளித்துரைக்கும் தமிழ் மறை நூலாம்.'

திராவிடப் பிரகாசிகை.

'மணற்கிளைக்க நீறும் மைந்தர்கள் வாய்வைத்
துணைச்சுரக்கும் தாய்முலை யொண்பால்—பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பால் மதிப்புலவோர்க்
காய்தொறும் ஊறு மறிவு.'

உருத்திரசன்ம கண்ணர்.

'புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேல்
சிலவர் புலவரெனச் செப்பல்—நிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றும்
கறங்கிருள் மாலைக்கும் பெயர்.'

மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர்க் கிழார்.

'பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனதம்
ஆவிற் கருமுனியா யானைக்—கமரரும்பல்
தேவிற் றிருமா லெனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா.'

கவிசாகரப் பெருந்தேவனர்.

'அறந்தகளி யான்ற பொருள்திரி யின்பு
சிறந்தநெய் செஞ்சொல்தீத் தண்டு—குறும்பாவா
வள்ளுவனார் ஏற்றினார் வையத்து வாழ்வார்கள்
உள்ளிருள் நீக்கும் விளக்கு.'

நப்பாலத்தனார்.

இத்தகைய ஒள்ளிய பொருளுடைச் சீரிய நூலைக் கம்பர் முதலிய கவிவாணர்கள் எல்லாம் பொன்னே போல் போற்றி வந்தனர் எனில், இந் நூலின் சிறப்பை யென்னென் றெடுத்தியம்ப வல்லேம்!

ஸ்ரீ

# ஒட்டக்கூத்தர்

•••○○○•••

## பிறப்பும் சிறப்பும்

பூமடந்தையின் திலகம்போற் றிகழும் தமிழ்நாடு மூன்றனுட் சோழநாடென்பதொன்று. ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் அந்நாட்டின்கண்ணுள்ள மலரி யென்னும் ஊரில் ஒட்டக்கூத்தரென்னும் பெயரிய பெரும் புலவர் ஒருவர் தோன்றினர் என்பது,

'பசுபதி யருளா லந்நாட் பாரமுழு மைபங்கைக் கொண்ட
முசுகுந்தன் றுணையா வந்த முரட்பெரு வீரர் மைந்தர்
விசுவமேற் செய்த தாய மெய்த்தவப் பயனே யாகிச்
சிசுவொன்று சோழ நாட்டிற் சீயமொத் துதித்த தம்மா,'

என்னும் புலவர் புராணச் செய்யுளானும்,

'சென்று செவியளக்குஞ் செம்மையவாய்ச் சிந்தையுள்ளே
நின்றளவி லின்ப நிறைப்பவற்று—ளொன்று
மலரிவருங் கூந்தலார் மாதர்நோக் கொன்று
மலரிவருங் கூத்தன்றன் வாக்கு,'

எனக் காணப்படும் தண்டியலங்கார வுதாரணச் செய்யுளானும் நன்கு உணரப்படும்.

ஒட்டக்கூத்தர், கைக்கோள ரென்றும், தந்துவாய ரென்றும் கூறப்படும் செங்குந்தர் மரபில் வந்தவர். இவ் வகுப்பினர் நூல் நெய்யும் தொழிலினை யுடையவர். செங்குந்தர், கால்மாறிக் கால்மாறி மிதித்து நூல் நெய்பவராதலான், அம்மரபினர், கூத்தரென்றும் அழைக்கப்பட்டு வந்தனர் என்பது சில அறிஞரின் துணிபு. செங்குந்த

மரபினராகிய நம் புலவர், கூத்தரென்னும் பொதுப் பெய ரையே சின்னாட் பெற்றிருந்து, பின்னர், 'ஈட்டி எழுபது' என்னும் அரிய நூலைப் பாடி, அறுபட்டு வீழ்ந்து கிடந்த சிரங்கள் ஒட்டப் பாடிய காரணத்தான் ஒட்டக்கூத்த ரென்னும் சிறப்புப் பெயர் பெற்று விளங்கினர் எனச் சிலர் கூறுகின்றனர்.

'சரசுவதி தமபலங் கொடுக்கக் கவிதை புண்டாகிய கூத்த முதலியார் அரும்பைத தொள்ளாயிரம பாடும் போது, விக்கிரம சோழன் கேட்டு, ஒரு கவியை யொட் டச் சொல்லென்று சொன்னபோது அவர்,'

'நடித்தது நச்சர வுச்சியி னுச்சி மதிலிலங்கை
பிடித்தது வென்ற திருபது தோள்பதி னெண்பகலே
முடித்தது பாரதம் வீரப் புலிவைப்ப மூரிச்செண்டால்
அடித்தது பொற்கிரி விக்கிரம சோழ வகளங்கனே,'

என ஒரு கவி பாடிய காரணததால் அவருக்கு ஒட்டக் கூத்தர் என்னும பெயர் உண்டாயிறறு எனச் சிலரும்,

'அவர் விக்கிரம சோழனுலாப் பாடியபோது, அவ் வேந்தன் இரண்டு கண்ணியை ஒரு பாட்டாகப் பாடென்ற போது,'

'கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ்
செய்ய கரிய திருமாலே—வையம்
அளந்தா யகளங்கா வாலிலைமேற் பள்ளி
வளர்ந்தாய் தளர்ந்தாளென் மான்,'

என ஒட்டப் பாடின காரணததான் ஒட்டக் கூத்தர் என்னும் பெயரைப் பெற்றனர் எனச சிலரும் கூறு கின்றனர்.

ஒட்டக்கூததர், தமது இளமைப் பருவத்தில் புது வையில் வசித்திருந்த வெண்ணெய்ச் சடையன் தந்தை யாகிய சங்கரனுக்குச் சில நாள் உதவித் தொழில் புரிந்து வந்தனர். அப் பதியில் வதிநத காங்கேயன் என்னும் கருணை வள்ளல் ஒருவன், ஆதரவற்றிருந்த ஒட்டக்கூத்

தர்க்குக் கல்வி யென்னும் கருந்தனத்தைக் கொடுத்து, 'கவிராக்ஷதன்,' எனவும், 'கௌடப்புலவன்,' எனவும், அவர் சிறப்புப் பெயர் பெறும் வண்ணஞ் செய்தனன். ஒருவர் தினையளவு நன்றி செயினும், அறிவுடையோர் அதனைப் பனை யளவாகக் கொள்வராதலான், அறிவிற் சிறந்து விளங்கிய அரும் புலவராகிய ஒட்டக்கூத்தர், கனிந்த வுள்ள முடைய காங்கேயன்மேல், 'நாலாயிரக் கோவை' ஒன்று பாடி, அவற்குப் பொன்றுப் புகழுடம்பைக் கொடுத்தனர்.

இவ்வண்ணம் ஒட்டக்கூத்தர், தமிழில் அரிய நூற்கள் இயற்றும் புலமை பெற்று ஒளிர்ந்து வருகையில், அவரை யாதரித்து வந்த காங்கேயன் என்பான் பூத வுடம்பை விட்டுப் பொன்னுலகஞ் சேர்ந்தனன். நாமகள் நண்ணி யிருக்குமிடத்தே பூமகள் பொருந்தி யிராள் என்பதற் கேற்ப, ஒட்டக்கூத்தர், வறுமைப் பிணியால் பெரிதும் வருந்தினர். வறுமைப் பிணி, கலங்கா மன முடையோரையும் கண்கலங்கி நிற்கச் செய்யும்; அறிவிற் சிறந்தோரையும் அரைக் கணத்தில் ஆட்டி வைக்கும்; பெருமதிப்புடன் வாழும் பெருமக்களையும் மதியுடன் மானத்தையும் இழக்கச் செய்யும்.

ஒட்டக்கூத்தர், தமக்குற்ற வறுமைப் பிணியை நீக்குதற் பொருட்டு, அக்காலத்துச் சோழ நாட்டிற் செங்கோல் ஓச்சி வந்த விக்கிரமச் சோழனிடஞ் சென்றனர். அச் சோழன், தண்டமிழ் மொழியை யாதரித்து வந்த பல வரசர்களுள் ஒருவன்; அடுத்தவர்களைக் காக்கும் அருங்குண முடையோன். அன்னோன், ஒட்டக்கூத்தரது கல்விப் பெருக்கையும் நுண்ணறிவையுங் கண்டு, பெரிதும் வியந்து, அப் புலவர் பெருமானுர்க்குக் கம்பளம் குண்டலம், கங்கணம், கரி முதலியவற்றை விருதாகக் கொடுத்துத் தன்னிடம்வைத்துக் கொண்டனன். அதனைத் தமிழ் நாவலர் சரிதையில்,

"சோழன் வரிசை யளித்து விடுத்தபோது கூத்த முதலி கூறிய வகுப்பு" :—

"இடுக்கட் புண்படு நிரப்பக கொண்டுழன்
றிரக்கச் சென்றவின் றெனககுச் சிங்களந்
திடுக்குற் றஞ்சுமவெஞ் சினத்துச செம்பியன்
றிருக்கைப் பங்கயஞ் சிரககத் தந்தன
படுக்கக் கம்பளம் பரக்கக் குங்குமம
பதிககக் கநகணம பரிககக் குஞ்சரம்
கடுககக் குண்டலங் கவிக்கச் சங்கினங்
கவிக்குப பஞ்சரங் கவிககத் தொங்கலே,"

எனக் காணப்படுஞ் செய்புள் வற்புறுத்துகின்றது.

ஒட்டக்கூத்தர், கலைமகளின் கருணையைப் பெற்ற வர் எனச சிலர் கூறுகின்றனர். அதனைத தமிழ் நாவலர் சரிதையில் காணப் படும், "சரசுவதி தமபலங் கொடுக்கக் கவிதை புண்டாகிய கூதத முதலியாரை, அரும்பைத் தொள்ளாயிரம் பாடும்போது, விக்கிரமசசோழன் கேட்டு, ஒரு கவியை யொட்டச சொல்லென்று சொன்னபோது பாடியது," என்னுந் தலைப்பு வற்புறுததுகின்றது.

ஒட்டக்கூத்தரது பெருங்கல்வியும் பேரறிவும் விக்கிரமச் சோழன் மனத்தைக் கொள்ளை கொண்டன. விக்கிரமனுக்கு நம புலவர்பால் நாளுக்கு நாள் அன்பு பெருகிக் கொண்டே வந்தது. 'அறிவுடை யொருவனை யரசனும் விரும்பும்,' என்னும் முது மொழி யெங்ஙனம் பொய்க்கும் ?

விக்கிரமச் சோழன், தன்னுடைய அரும் புதல்வ னுகிய குமார குலோத்துங்கனுக்கு ஒட்டக்கூத்தரையே நல்லாசிரியராககி, அவரிடம் தமிழிலுள்ள அருமை பெரு நூல்களை யெல்லாம் தன் புதல்வன் ஆராய்ந்து வரும் வண்ணஞ் செய்தான். வளர்பிறை மதியே போல் குமார குலோத்துங்கனுக்கு நாளுக்கு நாள் அறிவு வளர்ந்து

வந்தது. புதல்வன், கூத்தரது கருணையால், விரைவில் கலைகளை யெல்லாம் கசடறக் கற்று விளங்கியது கண்டு விக்கிரமன் பேருவகை பூத்தான்.

"தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செய்ல்,"

என்னும் திருவள்ளுவரது திருவாக்கிற்கேற்ப விக்கிரமச் சோழன், தன் மகனுக்குச் செய்யவேண்டியதைச் செவ்வனே செய்து முடித்தனன்.

விக்கிரமன், ஒட்டக்கூத்தர்பால் வைத்திருந்த மதிப்பிற்கும அன்பிற்கும் அளவில்லை. அக்காலத்தில், புரவலா புலவர்களைத் தேவரைப் போல் மதித்து வந்தனர். விக்கிரமச் சோழன், தன்னுடைய அருமைப் புதல்வனாகிய குமார குலோத்துங்கனுக்கு இளவரசு பட்டங் கட்டிச் செய்தற்குரிய சடங்குகளைச் சிறக்கச் செய்யுமாறு ஒட்டக் கூத்தரிடம் கூறிவிட்டு உயிர் நீத்தனன்.

விக்கிரமச் சோழனது பிரிவால், குமார குலோத் துங்கன் சின்னாள் துன்பக் கடலுள் ஆழ்ந்திருந்தான். பின்னர், ஒரு நல்ல நாளில் ஒட்டக்கூத்தர் குமார குலோத் துங்கனுக்கு இளவரசு பட்டங் கட்டிப் பல்வகைப்பட்ட சடங்குகளை யெல்லாம் பாங்குடன் செய்து முடித்தனர். அக்காலை, அருமறை யந்தணர் அவ்விளவரசனுக்கு ஆசிகள் கூறினர். பாவலர் பலரும் அக்கோவிளங் குமரனுக்குப் பாமாலை சூட்டிப் பல்லாண்டு வாழ்த்துக் கூறினர். அச் சமயம், ஒட்டக்கூத்தர், குமார குலோத்துங்கனை வாழ்த்த வேண்டுமென்று கருதி,

"ஆடுங் கடைமணி நாவசை யாம லகிலமெல்லா
நீடுங் குடையைத் தரித்த பிரானிந்த,"

எனப் பாடிப் பாட்டை முடிப்பதற்குள், குமாரகுலோத் துங்கன், தன்னை ஆசிரியர் புகழ்ந்து பாடுதல் நன்றன் றெனக் கருதி,

பாடும் புலவர் பணிகொண்ட கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்கச் சோழனென்றேயெனைச் சொல்லு
[வரே,''

என மற்றைப் பகுதியைத் தான் பாடிச் செய்யுளை முடித்தனன். குமார குலோத்துங்கன் செயலைக் கண்ட பலரும் பரமானந்த முற்றனர்; ஒட்டக்கூத்தர்பால் குலோத்துங்கன் வைத்துள்ள அன்பைக் கண்டு பெரிதும் வியந்தனர். பின்னர், குலோத்துங்கன் ஒட்டக்கூத்தரைத் தன்னுடைய தந்தையே போல் கருதி, அவருக்குப் பலவகைச் சிறப்பையுந் தந்து, அவர் நன்மொழிகளைக் கேட்டு நாணிலம் புரந்து வந்தான்.

# இரண்டாம் இயல்

## மண வினை முடித்து மகிழ்ச்சி யெய்தல்

ஒட்டக்கூத்தர், குமார குலோத்துங்கனைத் தம்முடைய அருமைப் புதல்வனைப் போல் பார்த்து வந்தனராகையால், புதல்வர் தக்க பருவமுற்ற காலைத் தந்தையர் அவர்களது மணவினையைக் குறித்துச் சிந்திப்பது போல், கூத்தரும் ஒரு நாள் குலோத்துங்கனது திருமணத்தைக் குறித்துச் சிறிது நேரம் ஆழ்ந்த ஆலோசனையில் அமர்ந்திருந்தனர். அப்பொழுது, விக்கிரமச் சோழன் தனது இறுதிக் காலத்துக் கூறிய வாக்குப் புலவரது நினைவிற்கு வந்தது. அஃதாவது தொன்று தொட்டு வரும் வழக்கமே போல் குமார குலோத்துங்கனுக்குப் பாண்டிய குலத்துதித்துள்ள பெண்ணையே மணஞ் செய்விக்க வேண்டுமென்பது. உடனே ஒட்டக்கூத்தர், குமார குலோத்துங்கனிடஞ் சென்று, ''மாநிலம் புரக்கும் மன்ன, தக்க பருவத்

தில் பயிர் செய்யாமல், பருவங் கழிந்த பின்னர், பயிரிட்டுப் பயன் பெறுது மனங் கலங்குவோரைப் போலாது, பருவத்தில் உனது மணவினையை முடித்து மகிழ்வுற விரும்புகின்றேன். உன்னுடைய தந்தையார் உயிர் விடுந் தருணத்தில் உனக்குப் பாண்டிய குலப் பெண்ணையே மனைவியாகத் தேர்ந்தெடுக்கும் வண்ணம் கூறினார். அவர் வாக்கின்படியே பாண்டிய அரசனாய் விளங்கும் வரகுணனுடைய அருமைப் புதல்வியை யுனக்கு மணம் புரிவிக்க விரும்புகின்றேன். மண மக்களின் மனக்கோள் உணர்ந்து மணவினை முடித்தல் மாண்புடைத்தாகும். ஆதலான் இக் கருமத்தில் உன் கருத்தியாது?" என்று வினவினார்.

ஒட்டக்கூத்தரது உரையைக் கேட்ட குமார குலோத்துங்கன், "பெரியீர், யான் உம்மை யென்னுடைய தந்தையாரைப் போன்றே கருதி வருகின்றேனாதலான், உமது கருத்தின்படியே எல்லாக் காரியங்களையுஞ் செய்யும்," என்று மிக்க பணிவுடன் கூறினான். குலோத்துங்கன் கூறிய இன்மொழியால் புலவர் ஆநந்தக் கடலுள் ஆழ்ந்தார்.

பின்னர், ஒட்டக்கூத்தர், குமார குலோத்துங்கனிடம் விடை பெற்று, பலவகை விருதுகளுடன் மதுரையைப் புரந்து வந்த வரகுண பாண்டியன்பாற் சென்றார். அக் காலத்தில் தமிழ்ப் புலவர் தேவரேபோல் போற்றப்பட்டு வந்தனராகையால், வரகுண பாண்டியன் ஒட்டக்கூத்தரை யெதிர் கொண்டழைத்து, அப் புலவருக்குச் செய்ய வேண்டிய மரியாதைகளைச் செவ்வனே செய்தனன். பின்னர், சிறிது நேரம் புரவலனும் புலவரும் பற்பலவற்றைப் பற்றி அளவளாவிக் கொண்டிருந்தனர். பிறகு, ஒட்டக்கூத்தர், வரகுண பாண்டியனை நோக்கி, "காவல, விக்கிர

மச சோழன் மகனாகிய குமார குலோத்துங்கனுக்கு உன்னுடைய அருமைப் புதல்வியை மணம் பேச வந்துளேன். அம் மன்னவனது கல்விப் பெருக்கையும் வீரச் செருக்கையும் இவ்வுலகம் அறியுமாதலான், நான் அவற்றைப் பற்றிப் புகழ்ந்து பேசின், என் கூற்றுப் பயனில் கூற்றாம். குமார குலோத்துங்கனுக்கு உன் புதல்வியைக் கொடுக்க வுனக்கு விருப்பமுண்டா ?" என்று வினவினர்.

ஒட்டக்கூத்தர் கூறியவற்றை யெல்லாம் அமைதியுடன் கேட்டுக் கொண்டிருந்த வரகுண பாண்டியன், புலவர்க்குக் குமார குலோத்துங்கன்பால் உள்ள அன்பை அறிய விரும்பி, அப் புலவரை நோக்கி, "வண்டமிழ்ப் புலவீர், சோழர் குலத்திற் பிறந்துள்ள குமார குலோத்துங்கன், பழுதற்ற பாண்டியர் குலத்தில் பிறந்துள்ள என் அருமைப் புதல்வியை மனைவியாகக் கொள்ளத்தக்கவனா ? பெண் கொள்வோர், பெண்ணைக் காட்டிலும் பல வகையிலும் தலை சிறந்து விளங்க வேண்டுமென்பது பெரியோரது துணிபாதலான், உமதுடைய அரச குமாரன் எவ்வகையில் சிறப்புற்று விளங்குகின்றனன் என்பதையறிய விரும்புகின்றேன்," என்று மொழிந்தான்.

ஒட்டக்கூத்தர், சோழ மன்னரையும் அவர்களுடைய நாட்டையும் பற்றி மாத்திரம புகழாமல், பாண்டிய மன்னரையும் அவர்களுடைய நாட்டையும் இகழ்ந்து,

"கோரத்துக் கொப்போ கனவட்ட மம்மானை
கூறுவதுங் காவிரிக்கு வையையோ வம்மானே
ஆருக்கு வேம்புநிக ராகுமோ வம்மானே
யாதித்த னுக்குநிக ரம்புலியோ வம்மானே
வீரர்க்குள் வீரனொரு மீனவனோ வம்மானே
வெற்றிப்பு லிகொடிக்கு மீனமோ வம்மானே
ஊருக்கு றந்தைநிகர் கொற்கையோ வம்மானே
யொக்குமோ சோணாட்டைப் பாண்டிநா டம்மானே,"

என வொரு செய்யுள் கூறினர்.

ஒட்டக்கூத்தர் பாடிய பாட்டைக் கேட்ட வரகுண பாண்டியன், புலவர்க்குச சோழர்பால் உள்ள பேரன்பைக் கண்டு பெரு மகிழ்வெய்தினன். எனினும், பாண்டிய ரது பெருமையை ஒட்டக்கூத்தர்க்கு உணர்த்த வேண்டு மென்று கருதிய வரகுணன், தன்னருகிருந்த புகழேந்திப் புலவரை நோக்கினன். அரசன் குறிப்பறிந்து ஒழுகி வரும் அருங்கலைஞராகிய புகழேந்திப் புலவர், ஒட்டக் கூத்தர் மனம் வருந்தும் வண்ணம்,

“ ஒருமுனிவ னேரியிலோ வுரைதெளிந்த தம்மானே
யொப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ வம்மானே
திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ வம்மானே
சிவனமுடியி லேறுவது செங்கதிரோ வம்மானே
கரையெதிரல் காவிரியோ வையையோ வம்மானே
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ வம்மானே
பரவைபணிந் ததுஞ்சோழன் பதந்தனையோ வம்மானே
பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே யம்மானே, ”

எனச் சோழ மன்னர் நாடு முதலியவற்றை யிழித்துப் பாண்டிய மன்னரைச சிறப்பித்துப் பாடினர்.

புகழேந்திப் புலவர் பாடிய பாடலைக் கேட்ட ஒட்டக் கூத்தர், அப் புகழேந்திப் புலவரது கல்விப் பெருக்கைக் கண்டு மகிழ்ந்தனரேனும், அச சமயத்தில் அப் பாடலால் அவரது மனம் சிறிது வருத்தமுற்றது. இருப்பினும், அப் புலவர் அவ் வருத்தத்தை வெளிக்குக் காட்டாமல், வரகுண பாண்டியனை நோக்கி, “பாண்டிய, உனது குல மும் சிறப்புடையது என்பது எனக்கும் தெரியும். சோழ மன்னரது சிறப்பை யறிய நீ விரும்பியதனுல் நான் அவர் கள் சிறப்பை யெடுத்துக் கூறினேன். ஆதலால் என்னைப் பற்றி நீ வேறுவிதமாக எண்ண வேண்டா,” என்றார்.

வரகுணன், ஒட்டக்கூததரை நோக்கி, “செந்தமிழ்ப் புலவீர், நீர் சோழ மன்னர்க்கு உள்ள ஏற்றத்தையே

கூறினீர். நீர் கூறிய அச் செய்யுளால் உண்மையில் என துள்ளம் பெரிதும் உவந்தது. ஒவ்வொரு அரசரும உம்மைப் போன்ற அரசப் பற்றுடைய அரும் புலவர் களையே அவைக்களப புலவர்களாக அமர்தத வேண்டும என்பது எனது துணிபு. சோழ மன்னா பாண்டிய மன்னர்க்கு எவ்வகையினும் தாழ்ந்தவரல்லர் என்று யானே வற்புறுத்திக கூறுவேன். உமது கல்விப் பெருக கைக் கண்டு களிகூர்வதற்கே யான் சோழரது சிறப்பைக கூறுமபடி யுமமைக் கேட்டேன். என் அருந்தவப் புதல் வியைக் குமார குலோத்துங்கனுக்குக கொடுப்பதற்கு யான் இசைகின்றேன்,” என்று கூறினன். பின்னர், அப் பாண்டியன், சில அந்தணரை யழைப்பித்து, நல்ல நாள் பார்த்து, அந் நாளை ஓர் ஓலையில் குறித்து, அவ் வோலையை யொட்டக்கூத்தர்பால் கொடுத்தான். பின்னர், ஒட்டக கூத்தர், வரகுண பாண்டியனிடம் விடை பெற்றுக கலி யாண வோலையைக் கைக்கொண்டு குமார குலோத்துங் கன்பால் வந்து சேர்ந்தார்.

ஒட்டக்கூத்தரது முகப் பொலிவையும் அவர் கையி லுள்ள மங்கல வோலையையுங் கண்ட குமார குலோத்துங் கன் அளவிலா ஆநந்தக் கடலுள் ஆழ்ந்தான். பின்னர், ஒட்டக்கூத்தர், பாண்டியன் அவைக்களதது நடநதவை யனைத்தையுங் கூறி மங்கல வோலையை மன்னவன் கையில் கொடுத்தார். அரசிளங்குமரன், ஓலையில் குறிக்கப் பெற் றுள்ள நாளைப் படித்து நனி மகிழ்ந்தான்.

பின்னர், குமார குலோத்துங்கன், தந்தை போல் விளங்கும் ஒட்டக்கூத்தரை நோக்கி, “பெரியீர், யாம் விவாக நிமித்தம் பாண்டி நாடு சென்றால், இவ்விடமிருந்து செங்கோல் செலுத்திக் குடிகளைப் புரப்பவர் யாவர்?” என்றான். ஒட்டக்கூத்தர், சிறிது நேரம் ஆழ்ந்த யோசனை யில் இருந்து, பின்பு, மன்னனை நோக்கி, “ஐய, நீ நால்

வகைப் படைகளுடனும் மற்றையோருடனுஞ் சென்று, கடிமணத்தை முடித்துக் கொண்டு கடிதில் வருக. யான் அதுவரைக்கும் இங்கிருந்து உன்னுடைய காரியங்களை யெல்லாம் செவ்வனம் பார்த்துக் கொண்டு வருகின்றேன்," என்றார்.

ஒட்டக்கூத்தர் கூறிய மொழிகள் குமார குலோத்துங்கனுக்கு இன்பத்தையும் துன்பத்தையும் கொடுத்தன. புலவர் பெருமானார் சமயத்திற் கேற்ற யோசனை கூறிக் காரியங்களை நடத்த வல்ல ஆற்றலுடையவர் என்பதை நினைக்க இன்பமும், தந்தைபோல் உடனிருந்து உதவிவரும் தண்டமிழ்ப் புலவர் கலியாணத்தைக் கண்ணாரக்கண்டு களிப்படைவதற்கில்லையே யென்பதை நினைக்கத் துன்பமும் மன்னவன் மனத்தில் மன்னி நின்றன. பின்னர், சோழ மன்னன் ஒருவாறு மனந் துணிந்து, ஒட்டக்கூத்தரைத் தனக்குப் பதில் சோழ நாட்டில் இருத்தி, அவரிடம் விடைபெற்று, நால் வகைப் படைகளும் தன்னைப் புடை சூழ்ந்து வரப் பாண்டி நாடு சென்றான். அங்குக் குறித்த நாளில் குமார குலோத்துங்கனுக்கும் பாண்டியன் அருமைப் புதல்விக்கும் திருமணம் நிகழ்ந்தது. அவ்வூர்க் குடிகள் எல்லாம் அத் திருமணத்தைக் கண்டு களிப்பெனனும் கடலுள் ஆழ்ந்தனர்.

குமார குலோத்துங்கன் சில நாள் மாமனார் வீட்டிலிருந்து, அவ்விடமிருந்த பலரையும் மகிழ்வித்து வந்தான். பின்னர், அம் மன்னவன், தன்னாட்டிற்குப் போக விரும்பி, மாமன், மாமி, முதலியோரிடம் உத்தரவு பெற்றுக் கொண்டான். பாண்டியன் தன்னுடைய செல்வப் புதல்வி உவக்கும் வண்ணம் அவளுக்குச் சிறந்த பொருள்களை யெல்லாம் சீதனமாக வழங்கினான். பின்னும், பாண்டிய மன்னன், தன்னுடைய அவைக்களப் புலவராய் விளங்கிய புகழேந்திப் புலவரையும், தன்னுடைய மகளுக்குத் தக்க

சமயங்களில் நற்புத்தி புகட்டுவதற்காகச் சீதனங்களுடன் அனுப்பி வைத்தான். குமார குலோத்துங்கன், உறையூரை யடைந்து, ஒட்டக்கூத்தர்பால் வந்து, மனைவியுடன் அப் புலவர் பெருமானாரை வணங்கி நின்றான். சோழ மன்னனையும் பாண்டியன் புதல்வியையுங் கண்ட புலவர் அளவிலா ஆநந்த முற்று, அவர்களை வாயார வாழ்த்தினார்.

# மூன்றாம் இயல்

## புகழேந்திப் புலவரைச் சிறைப் புகுவித்தல்

குமார குலோத்துங்கனும அவன் மனைவியும் மனம் ஒருமித்து இல்லறத்தை யினிது நடத்தி வந்தனர். ஒரு நாள், ஒட்டக்கூத்தர், குலோத்துங்கனை நோக்கி, "ஐய, யான் உன்னிடம் ஒன்று கூற விரும்புகின்றேன். அது நமது நாட்டிற்கு வந்துள்ள புகழேந்திப் புலவரைப் பற்றியதே யாகும்," என்றார்.

குமார குலோத்துங்கன், "புலவரே, புகழேந்திப் புலவரைப் பற்றிய செய்தி யாதுளது? அதனைக் கூறியருளும்," என்றான். பின்னர், ஒட்டக்கூத்தர், குமார குலோத்துங்க மன்னனைப் பார்த்து, "காவல, யான் உனக்குப் பெண் பேசப் பாண்டி நாடு சென்றிருந்த பொழுது, பாண்டியன் சோழ மன்னரது பெருமையை யெடுத்துக் கூறும்படி என்னைக் கேட்டான். யான் அப் பொழுது சோழ மன்னர்க்கு உள்ள பெருமையையே யொரு செய்யுளால் கூறினேன். அக்காலை, புகழேந்தியார் சும்மா இராமல், சோழ மன்னரை யிழித்தும், பாண்டிய மன்னரைப் புகழ்ந்தும் ஒரு செய்யுள் கூறினார். அச் செய்யுளை யான் கேட்ட வுடன், என் மனம் பெரிதும் வருந்திற்று. பாண்டியன் தன் புதல்வியை யுனக்குக்

கொடுக்கச் சம்மதிப்பனோ, சம்மதியானோ வென்ற ஐயம் என்னுள்ளத்தை விட்டு அகலவில்லை. ஆனால், பாண்டியன் பேரறிவாளனாகையால், புகழேந்திப் புலவர் பாடிய பாடலைச் சிறிதும் கவனியாது தன் அருமைப் புதல்வியை யுனக்குக் கொடுக்க இசைந்தான்," என்று சோழனுக்குப் புகழேந்தியார் மீது வெறுப்பு உண்டாகும் வண்ணம் பேசினர்.

ஒட்டக்கூத்தர் கூறியவற்றை யெல்லாம் அமைதியுடன் கேட்டுக் கொண்டிருந்த குமார குலோத்துங்கனுக்குப் பெருஞ் சினம் மூண்டது. உடனே அம் மன்னவன் காவலரை யழைத்துப் போலிப் புலவர்களை யடைத்து வைத்திருக்கும் சிறைச் சாலையில் புகழேந்திப் புலவரையும் அடைக்குமாறு கட்டளை யிட்டான்.

ஒட்டக்கூத்தர், குமார குலோத்துங்க மன்னன் காலத்தில், தமிழ்ப் புலவர் என வெளி வரும் பலரையும் அழைத்து அவரைத் தக்க கேள்விகள் கேட்டு, அக் கேள்விகட்குத் தகுந்த விடை யளியாதவரைச் சிறைச் சாலையிலிட்டு, நவராத்திரி யன்று கொலு வீற்றிருக்கும் சரசுவதி தேவியின் முன்னர், ஆட்டுக் கடாக்களைப் பலி யிடுவது போல், இவ்விரண்டு புலவர்கள் குடுமிகளை முடியிட்டு வெட்டி வந்தனர் என வொரு கதை வழங்கி வருகின்றது. அக் கதைக்குப் பற்றுக் கோடா யிருப்பது,

"குட்டுதற்கோ பிள்ளைப்பாண் டியனீங் கில்லை
குறும்பியள வாக்காதைக் குடைந்து தோண்டி
யெட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
யிரண்டொன்ற முடிந்துதலை யிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்த னில்லை
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ வறிவில்லாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே,"

என வழங்கி வரும் ஒரு செய்யுளே. அக் கதையைப் பற்றிய ஆராய்ச்சியைப் பின்னர்க் காண்க.

நிற்க, குமார குலோத்துங்கன் கட்டளைப்படிப் புகழேந்திப் புலவர் சிறைச் சாலையில் அடைக்கப்பட்டார். அச் சிறைச் சாலையில் முன்னரே அடைக்கப்பட்டுள்ள சில புலவர் புகழேந்தியாரை நோக்கி, "அருந்தமிழ்ப் புலவீர், நாங்கள்தான் புலமை நிரம்பாதவர்கள் என ஒட்டக் கூத்தனால் கருதப்பட்டு இவ்விடம் இருக்கின்றோம். கல்விக் கடலென விளங்கும் நீவிர் இவ்விடம் வருதற்கு நேர்ந்த காரணம் யாது? ஒவ்வொரு நவராத்திரியிலும் சிறைச் சாலையில் அடைக்கப்பெற்றுள்ள புலவர்களை ஆட்டுக் கடாக்களை வெட்டுவது போல் வெட்டி வருதல் ஒட்டக் கூத்தனது கொடுந்தொழில். அந் நவராத்திரி நாளை நினைக்கும் பொழுதே எங்கள் குடல் குழம்புகின்றது; மனம் கலங்குகின்றது; மெய் வியர்க்கின்றது. எங்களை இத் துன்பத்தினின்றும் காப்பவர் ஒருவரும் இல்லையே," எனக் கதறிக் கூறினர்.

சிறைச் சாலைப் புலவரது பரிதாப நிலையைக் கண்ட புகழேந்திப் புலவர், அப் புலவர்களை நோக்கி, "ஐயன்மீர், நீங்கள் மனம் வருந்த வேண்டா. கடவுள் நம்மைக் காப்பார். நான் சொல்லும் வண்ணம் நீங்கள் நடப்பீரானால் உமக்கு யாதொரு தீங்கும் நேரிடாது," என்றார்.

புகழேந்திப் புலவருடைய இன் சொற்களைக் கேட்ட சிறைச் சாலைப் புலவர் அனைவரும் திசை தவறி நடுக் கடலில் கலங்கி நின்ற மாலுமி ஒரு கரையைக் கண்டு அடைந்த அளவிலா ஆநந்த மடைந்தனர். அப்பொழுது புகழேந்தியார், "அன்பர்காள், இன்று முதல் யான் உங்களுக்கு இலக்கிய இலக்கணங்களை முறையாகக் கற்றுக் கொடுக்கின்றேன். நீங்கள் உமது முழுக் கவனத்தையும் கல்வியில் செலுத்தி, விரைவில், ஆசு, மதுரம், சித்திரம்,

வித்தாரம் எனப்படும் நால்வகைக் கவிகளையும் பாடவல்லவ ராயின். பின்னர், உமக்கு இறைவன் அருளால் நன் மையே யுண்டாகும்," என்று சிறைச் சாலைப் புலவர்க்கு மிக்க கனிவுடன் கூறினர். அன்று முதல் அப் புலவர்கள் புகழேந்திப் புலவரிடம் இலக்கண இலக்கியங்களை முறையே கற்றுப் பெருட் புலமை யுற்றனர்.

புகழேந்திப் புலவர் சிறைச் சாலையில் இருந்த பொழுது அல்லி யரசி மாலை, பவளக்கொடி மாலை முதலிய பல நூற்களை எளிய நடையில் இயற்றித் தண்ணீர் கொண்டு சிறைச் சாலை வழியாகச் செல்லும் பெண்க ளுக்குப் பலகணி மூலமாக அந் நூற்களைக் கொடுத்து, அப் பெண்கள் உளமகிழ்ந்து கொடுக்கும் உணவைப் பெற்றுத் தாமும் உண்டு மற்றையோர்க்கும் கொடுத்து நாட்களைக் கழித்து வந்தனர் என ஒரு கதை வழங்கி வருகின்றது.

"கற்றோர்க்குச் சென்ற விட மெல்லாம் சிறப்பு," என்னும் முது மொழிக்கிணங்கப் புகழேந்திப் புலவர் சிறைச் சாலையிலும் பெருஞ் சிறப்புடன் விளங்கினர். சிறைச் சாலைக் காவலரும் புலவர்பால் பேரன்பு காட்டி வந்தனர்.

புகழேந்திப் புலவர், சிறைச் சாலையிலிருந்த பலர்க் கும் அழியாப் பொருளாகிய கல்வியை வழங்கி, வள்ளல் என்னும் பெயரெடுத்து வருகையில், சிறைச் சாலைப் புலவர்க்கு இறுதி நாளாகிய நவராத்திரி நாள் வந்தது. அன்று காலை, குமார குலோத்துங்கன் ஒட்டக் கூத்த ருடன் ஊர்வலம் வந்தான். அப்பொழுது புகழேந்திப் புலவர் சிறைச் சாலையின் மேன் மாடியில் நின்று கொண் டிருந்தார். புகழேந்திப் புலவரைக் கண்ட குமார குலோத் துங்கன், ஒட்டக் கூத்தர்க்குப் புகழேந்தியாரைச் சுட்டிக் காட்டி, "இம் மாடியின்மேல் நின்று கொண்டிருப்பவர் கல்வியிற் சிறந்தவ ரல்லரோ?" என்று வினவினன்.

அப்பொழுது ஒட்டக்கூத்தர்,

"மானிற்கு மோவந்த வாளரி வேங்கைமுன் வற்றிச்செத்த
கானிற்கு மோவவ் வெரியுந் தழன்முன் கனைகடலின்
மீனிற்கு மோவந்த வெங்கட் சுரவமுன் வீசுபனி
தானிற்கு மோவக் கதிரோ னுதயத்திற் றார்மன்னனே,"

என வொரு செய்யுள் கூறினர். ஒட்டக்கூத்தர் பாடிய செய்யுளைக் கேட்ட புகழேந்திப் புலவர், குலோத்துங்க மன்னனை நோக்கி, "மாநிலங் காக்கு மன்னரே, இப்பொழுது ஒட்டக்கூத்தர் பாடிய பாட்டை நான் வெட்டிப் பாட வேண்டுமா? அல்லது ஒட்டிப் பாடவேண்டுமா?" என்றார். குமார குலோத்துங்கன் ஒட்டக்கூத்தர்பால் வைத்துள்ள அன்பின் பெருக்கால், புகழேந்திப் புலவரை நோக்கி, "புலவீர், ஒட்டக்கூத்தர் பாடிய செய்யுளை யொட்டியே பாடும்," என்றான். உடனே புகழேந்திப் புலவர்,

"மானவ னனந்த வாளரி வேங்கையும் வற்றிச்செத்த
கானவ னனவ் வெரியுந் தழலுங் கனைகடலின்
மீனவ னனந்த வெங்கட் சுறவமும் வீசுபனி
தானவ னனக் கதிரோ னுதயமுந் தார்மனனனே,"

என வொரு பாடல் பாடி, ஒட்டக்கூத்தர் நாணுறச் செய்தார். அப்பொழுது குமார குலோத்துங்கன், 'ஒட்டக்கூத்தரைப்போல் புகழேந்தியாரும் சிறந்த புலவரே,' என்று தனக்குள்ளே எண்ணினன். எனினும், அம் மன்னன் ஒட்டக்கூத்தர்பால் தனக்கிருந்த அன்பின் மிகுதியால், புகழேந்திப் புலவர்க்கு அக்காலை யாதொரு நன்மையும் செய்தற்கியல வில்லை.

குமார குலோத்துங்கன் ஒவ்வோர் ஆண்டும் செய்து வரும் முறைப்படியே நவராத்திரித் திருவிழாவை யொன்பது நாள் வரைக்கும் நலம் பெறச் செய்தனன். பின்னர்,

பத்தாம் நாளாகிய விஜய தசமி யன்று சோழன், ஒட்டக் கூத்தர் விருப்பின்படிச் சிறைக் கோட்டத்திலுள்ள புல வர்களுள், புகழேந்திப் புலவர் ஒழிந்த மற்றைப் புலவரை யெல்லாம் தேவிக்குப் பலி யிடக் கருதினான். பின்பு, அம் மன்னன், தேவிக்கு முன்னர் இரண்டு இருக்கைகள் இடும் படி பணியாளர்க்குக் கட்டளையிட்டான். பிறகு, இடப் பெற்ற இருக்கைகளில் புரவலனும் புலவரும் அமர்ந்தனர்.

ஒட்டக்கூத்தர், அப்பொழுது தம்மருகில் நின்று கொண்டிருந்த கொலையாளர்களை நோக்கி, "நீங்கள் சிறைச் சாலைக்குச் சென்று, புகழேந்திப் புலவர் ஒருவரை மாத்திரம் விட்டு, மற்றைப் புலவர்களை ஒவ்வொருவராகக் கொண்டு வாரும்," என்று பணித்தார்.

ஒட்டக்கூத்தரது கட்டளையைப் பெற்ற கொலைஞர் சிறைக் கோட்டத்திற்கு விரைந்து சென்றனர். சிறைச் சாலையில் இருந்த புலவர்களுள், புகழேந்திப் புலவ ரொழிந்த மற்றைப் புலவர் கண்களுக்குச் சென்ற கொலை யாளர் எம தூதரைப் போல் விளங்கினர். அப்பொழுது சிறைப்பட்டிருந்த புலவர் பலரும் புகழேந்தியாரது திரு முகத்தை நோக்கினர். அக்காலை, புகழேந்திப் புலவர், சிறைச சாலையில் இருந்த மாந்தரை நோக்கி, "நீங்கள் சிறிதும் அஞ்ச வேண்டா. 'அவனன்றி யோரணுவும் அசையாது,' என்ற ஆன்றோர் வாக்கு ஒரு போதும் பொய்க்காது. கடவுள் உங்களைக் காப்பார்," என்று கூறிவிட்டுத் தம்மிடம் கல்வி பயின்று தேர்ந்துள்ளவர் களில் ஒருவனாகிய குயவனை முதலில் ஒட்டக்கூத்தரிடம் அனுப்பினார்.

புகழேந்திப் புலவரால் அனுப்பப் பெற்ற குயவன், ஒட்டக்கூத்தர் முன் சென்று சிறிதும் அஞ்சாது நின்றான். அவ்வண்ணம் நின்ற குயவனை ஒட்டக்கூத்தர் கனலெழ நோக்கி,

" மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
யானை முனவர் தெதிர்த்தவ னாடா ?"

என, அக் குயவன் திடுக்கிடும்படி வினவினர்.

புகழேந்திப் புலவரது இன்னருளால் புலமை நிரம்பப் பெற்ற அக் குயவன் புன்னகையுடன் கூடிய முகத்துடன்,

" கூனையுங் குடமுங் குண்டு சட்டியும்
பானையும் பண்ணும் அங்குசப் பையல்யான்,"

என ஒட்டக்கூத்தர் வியக்கும்படி விடையளித்தான்.

குயவன் சிறிதும அஞ்சாமல் கூறியதைக் கேட்ட ஒட்டக்கூத்தர், " இவன் கல்வி முறையே கற்றுத் தேர்ந்தவன் போலும்," எனத் தமக்குள்ளே யெண்ணிக் கொண்டு, அப் புலவனைக் கொல்லாது ஒரு புறம நிறுத்தி விட்டுக் கொலை யாளியை நோக்கி, " மற்றொரு போலிப் புலவனை யழைத்து வா," எனக் கட்டளை யிட்டார்.

முதல் சென்ற குயப் புலவன் தனது கல்வியின் ஆற்றலால் ஒட்டக்கூத்தர்க்கு அவமானத்தை விளைத்துக் கொலைத்தண்டத்தினின்று மீண்டான் என்றதைக் கேள்வியுற்ற சிறைச்சாலைப் புலவர்களும் புகழேந்தியாரும் அளவு கடந்த ஆநந்தங் கொண்டனர். சிறைச்சாலைக்கண்ணிருந்த புலவர் பலரும் புகழேந்தியாரைப் பெரிதும் புகழ்ந்து பேசினர்.

ஒட்டக்கூத்தரது கட்டளையைப் பெற்ற கொலையாளி யொருவன் சிறைச்சாலைக்குச் சென்று, கூத்தரது ஆணையை யறிவித்தான். உடனே புகழேந்திப் புலவர் குலத்தில் நாவிதனும் ஒரு கண் கெட்டவனுமாகிய ஒரு புலவனைப் பார்த்து, " நீ தைரியத்தோடு சென்று ஒட்டக்கூத்தன் கேள்விகளுக்குத் தக்க விடை யளித்து விட்டு வருக," எனக் கூறினர்.

ஒரு கண் கெட்ட அப் புலவன் கல்வியில் வல்லவ னுயினும் மனத்திட மற்றவன். ஆகையால் அம் மயிர் வினைஞன் மெய்ந் நடுக்கத்துடனே ஒட்டக்கூத்தர் முன் சென்று நின்றான்.

அங்ஙனம் நின்ற புலவனைக் கண்ட ஒட்டக்கூத்தர்,

"விண்பட்ட கொக்கு வல்லூறு கண்டென்ன
விலவிலக்கப்
புண்பட்ட நெஞ்சொடு மிங்குநின் றாய்பொட்டை
யாய்புகல்வாய்,"

எனப் பாதிச் செய்யுள் ஒன்று கூறி, மற்றைப் பாதியைப் பாடி முடிக்கும்படி அப் புலவனுக்குக் கட்டளை யிட்டார். உடனே அப் புலவன்,

"கண்பொட்டை யாயினு மம்பட்ட னுன்கவி
வாணர்முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திடுக்கிடப்
பாடுவனே,"

என ஒட்டக்கூத்தர் பாடிய பாடலை முடித்துக் காட்டினன். ஒட்டக்கூத்தர் நாவிதனது திறனைக் கண்டு பெரிதும் வியந்தார். பின்னர், கூத்தர் பெருமானுர் வேறொரு புல வனை யழைத்து வரும்படி கொலையாளியை யேவினர். அப்பொழுது ஒரு கருமான் வந்து நின்றான்.

கல்வியில் தேர்ந்து வந்து நிற்கும கருமானைக் கண்ட வுடன் ஒட்டக்கூத்தர் மனத்தின்கண் ஒருவித அச்சம் உண்டாயிற்று. ஆகையால், அப் புலவர்க்கு அப்பொழுது செய்யுள் கூற நாவெழவில்லை. இருப்பினும், அப்புலவர் பெருமானுர் அகத்தே தோன்றிய அச்சத்தைப் புறத்தே காட்டாது ஒருவாறு அடக்கிக் கொண்டு, தம்மெதிரில் வந்து நின்ற கருமானை நோக்கி, "நீ யாருடைய மைந்தன்? உன் பெயரென்ன? நீ எக் குலத்திற் பிறந்தவன்? கல்வியைக் கசடறக் கல்லாது புலவன் என்னும் பெயர்

புணைந்து நீ ஏன் வெளி வந்தாய் ?" எனப் பல கேள்விகள் கேட்டார். உடனே அக் கருமான்,

" செல்வன புதல்வன் திருவேங் கடவன் செகத்குருவாங்
கொல்லன் கவியைக் குறைசொல்லு வோரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர்முனனே
யல்லும் பகலு மடிப்பேன கவியிருப் பாலகொண்டே, "

என வோர் அழகிய செய்யுள் கூறி, ஒட்டக்கூத்தர் வினாக்களுக்கு விடை யளித்தான். அக்காலை, ஒட்டக்கூத்தர் அக் கருமானை யொன்றுஞ் செய்ய வியலவில்லை.

பின்னர், ஒட்டக்கூத்தர், மற்றுமொரு புலவனை யழைத்து வரும்படி கொலையாளனுக்குக் கட்டளை யிட்டனுப்பினர். கூத்தரது கட்டளையின்படி சென்ற கொலையாளி, விரைவில் வேளாள குலத்தில் தோன்றிய ஒரு புலவனைக் கொண்டு வந்து நிறுத்தினன். ஒட்டக்கூத்தர் தம்மெதிரில் வந்து நின்ற புலவனை நோக்கி, " நல்லாசிரியரை யடுத்து, அவருக்கு நெடுநாள் பற்பல பணிவிடை புரிந்து, அவர் திருவுள மிரங்கிய பின்னர், அவர்பால் அரிய இலக்கண இலக்கிய நூற்களை யெல்லாம் முறையே கற்று நிரம்பிய புலமை பெற்று விளங்கும எம போன்ற கவிச் சக்கிரவர்த்திகளுக்கு முன்பு நீயு மொரு புலவன் என வந்து நிற்கலாமா ?" எனக் கடிந்து கூறினர்.

ஒட்டக்கூத்தர் கடு மொழிகளைக் கேட்ட வேளாளன், உடனே,

" கோக்கண்டு மன்னர் குரைகடல் புகிலர் கோகனதப்
பூக்கண்டு கொட்டிடம் பூவா தொழிந்தில பூதலமேழ்
காக்கின்ற மன்ன கவியொட்டக கூத்தரின கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்க ளோதமிழ் பாடிய பாவலரே,"

என வொரு செய்யுள் கூறி, ஒட்டக்கூத்தர் தலை யிறங்கும் வண்ணம் செய்தான்.

வேளாளனது மன வன்மையைக் கண்ட ஒட்டக் கூத்தர், அப் புலவனை யொன்றுஞ் செய்யாமல் விடுத்தனர். பின்னர், தச்சன் ஒருவன் ஒட்டக்கூத்தர் முன் வந்து நின்ருன். அங்ஙனம் மன வன்மையுடன் எதிர்ப் போந்த தச்சனை ஒட்டக்கூத்தர் நோக்கி, "நீ செய்யுள் இயற்று வதில் வல்லனோ?" என்று வினவினர். அக்காலை, புகழேந் திப் புலவர் மாணவனாகிய தச்சன், கூத்தர் வினவிற்கு,

"சொன்னசந் தக்கவி யாவருஞ் சொல்லுவர் சொற்சுவைசேர்
இன்னசந் தக்கவி யேதென்ற போதி லெதிர்த்தவரை
வன்னசந் தங்கெட வாயைக் கிழித்திந்த வாச்சியினாற்
கன்னசந் தங்களி னுன்கவி யாப்பைக கடவுவனே,"

என ஓர் அரிய செய்யுளான் விடை யளித்தான். அக் கவியைக் கேட்ட ஒட்டக்கூத்தர், அப் புலவன் கவி பாடும் திறனை வியந்து அன்னோனைச் சிறையினின்றும்

பின்னர், தட்டான் ஒருவன் கூத்தர் முன் வந்து தோன்றி, அவர் தன்னைக் கேள்வி கேட்டற்கு முன் னரே,

"கிகிரிவட் டக்குடைச் செங்கோ லபயன செழுஞ்சிலம்பிற்
பகுதியொட் டக்கூத்தப் பட்டனை நாணப் பணைகலியின
மிகுதவொட் டத்தட்டி விட்டகை யோட்டி லுருக்கிக்குத்திப்
புகுதவொட் டித்தட்டி மேலணு காவண்ணம் போர்செய்வனே,"

என வொரு செய்யுள் கூறினன். உடனே ஒட்டக்கூத்தர் அத் தட்டானை யனுப்பிவிட்டு மற்றொருவனைக் கொண்டு வந்து நிறுத்தும்படி காவலாளர்க்குக் கட்டளை யிட்டார்.

அவ்வமயம் கூத்தரது கட்டளைப்படி கொண்டு வரப் பட்ட வண்ணான் ஒருவன்,

"சேலேய் விழிமட வாரிற்செங் காலனனஞ் சேர்பழனப்
பாலேய் மணவயிற் கூத்தநின போலியா பாப்புனைந்த
நூலேய் துகளறத் தூய்தாக்கு நோனமை நுவல்வதல்லால்
மேலேய் தமிழ்ப்புல வோரொன்னை யென்ன விளம்புவதே,"

என வொரு பாப்பாடி நின்ருன்.

பின்பு, ஒட்டக்கூத்தர், அவ்வண்ணானுக்கும் போக விடை யளித்து விட்டு, 'சிறைச் சாலையில் உள்ளவர்கள் எல்லாம் சிறந்த கவிஞர்களைப்போல் செய்யுள் பாடுகின்றார்களே! இவர்கட்கு இத்தகைய ஆற்றல் எவ்வாறு உண்டாயிற்று! இதற்குக் காரணம் புகழேந்திப் புலவனாகத்தான் இருக்கவேண்டும். ஆகையால், நாம் புகழேந்திப் புலவனை என்றென்றும் சிறையிலேயே யிருக்கும்படி செய்ய வேண்டும்,' எனத் தமக்குள்ளே பலவாறாய்ச் சிந்தித்தார்.

பின்பு, ஒட்டக்கூத்தர், புகழேந்திப் புலவர் ஒழிய மற்றையோரை யெல்லாம் சிறைக்களத்தினின்று விடுவித்தார். சிறை நீங்கப் பெற்ற புலவர் அனைவரும் புகழேந்திப் புலவரை வாழ்த்தி அவரிடம் விடை பெற்றுத் தத்தம் இருப்பிடஞ் சென்றனர்.

மேற்கூறிய கதையில் கவிச் சக்கரவர்த்தியார் எனமிளிரும் ஒட்டக்கூத்தர் நவராத்திரிதோறும் மிகத் தாழ்ந்தோரும் செய்தற் கஞ்சும் புன்றொழில் புரிந்து வந்தனர் என்பதைத் திருவாளர் சி. கு. நாராயணசாமி முதலியார் தாம் எழுதியுள்ள தமிழ்ப் புலவர் வரலாற்றில் மிக்க அழகுபடக் கண்டித்துள்ளார். அதனைக் கீழ்க்கண்டு மகிழ்வோம் :—

"நாம் தமிழ் மாதின் பெருமையை யுன்னி முயல்வது பரோபகாரக் காரியங்களுள் முதன்மையான தெனினும், உள நடுக்குறச் செய்யும் இத்தகைய கொடுஞ் செயலை மருவி யிருந்தனர் ஒரு புலவரெனின், அதனை யெவரும் ஆமோதியார் என்பதே எமதெண்ணம். ஆகையால் இவ் வசமபாவிதத்தை மறுப்பதற் கேற்ற சில காரணங்கள் கூறி உண்மை யிது வெனத் துணிவோமாக.

முதன் முதலில் இச் சம்பவத்தைக் குறிக்கும் சாசனமேனும் மேற் கோளேனும் இதுவரை கிடைத்தில.

"குட்டுதற்கோ," எனுந் தொடக்கத்ததாய செய்யு ளொன்றே இதைச் சுட்டுவதாக வுள்ளது. அதுவும் மிக்க சமீபத்திலுண்டான தனிப் பாடலே யன்றிப் பழங் காப்பியத்துக் கண்டதாய் ஆதாரமில்லை. இச் செய்யுள் கர்ண பரம்பரையாய் வழங்கி வந்ததை நம்பிப் பிற் காலத் தார் சற்றுப் பெருக்கி உருவகப் படுத்தியிருக்கின்றார்கள் என்பதே எமது துணிபு.

அல்லாமலும் இக் கொடுஞ் செயலைப் புரிந்து வந்தவர் ஒரு புலவரும் அதற்குதவியா யிணங்கியவன் ஓர் அரசனு மல்லரோ? இஃது எவ்வளவு பொருத்த முடைத்து என்பதைச் சற்று விசாரிப்போம்.

புலவர்களுக்கு இததகைய வனகுணம் வந்ததைப் பதை யாண்டும் யாருங் கேட்டிலர். இதனல் புலவராயி ஞோர்க்குக் கொடூர குணமே யிருநததில்லை யென்பதன்று. இவ்வாறு வன்னெஞ்சினராய்க் கொலைப் பாவத்தை ஏற்கத் துணிபவராவரோ புலவர் என்பதுதான் பெருஞ் சங்கை. மேலும் புலவர்கள் இனிய குணத்தராய், யாவரையும் மகிழ் விக்க நிற்குஞ் சாநத குணத்தராய் இருந்து வந்தனர் என் பதில் ஆக்ஷேபமே யின்று. புலவர்களைச் சமஸ்தானங் களில் வாழ்வித்ததும் இதனை எதிர்பார்த்துத் தான். இதை விட்டு நல்ல வோர் சுபதினத்தில் நாடெங்கணும் மகிழ்வெய்தி யிருக்குங் காலைத் தமிழைப் பெரிது மதித்து அருமையாய்க் கற்று, அதனல் சன்மானம் பெறவரும் புலவர்களைச் சிரத்தோடு சிரஞ்சேர்த்துச சேதித்து ஒரு புலவரும் ஓர் மன்னனும் களித்தன ரென்றால், இதன் உண்மை எவ்வளவில் நிற்கும் என்பதை இதனைப் படிக்கும் அன்பர்களே நிதானித்துக் கொள்ளவும்.

மற்றொரு விஷயத்தையும் நோக்கிக் கவனிக்க வேண் டும். காரணமின்றியோர் காரியமில்லை யாதலால், இக் கொலைத்தொழில் எதன் காரணமாக இருக்கலாம்?

பொருள் கருதியேனும் புகழ் கருதியேனும் இருக்குமோ வென்னில்? இல்லை. பொருளும் புகழும் இவ்வழியாகப் பெறுவதற்கு ஒட்டக்கூத்தர் வீரரல்லர். வீரரும் இத் தொழிலைக் கொடூரமென மதிப்ப ரென்னில், ஓர் புலவர் இக் காரியத்தைச் செய்யத் துணிவாரா? தமக்கு ஜன்ம விரோதியாயிருந்து தீங்கிழைத்து எதிர்த்துப் போர் செய்யும் பகைவராயிருப்பினும், போரிற் றோற்றுத் தம் வசமானல் அவர்களைத் துணித்தெறியத் துணியாது பட்ட காயங்களைப் பரிவுடனாற்றி மேற்கொளும் பேரிரக்கத்தையுடையோர் வீரரெனில், புலவர்களுக்குக் கொலைக்குணம் வருமென்பதை யார்தான் ஏற்க முன் வருவார்.

தமிழ் மாதை யணிபெறச் செய்வான் ஒட்டக் கூத்தர் இங்ஙனம் இக் கொடுந்தொழில் மேற்கொண்டு இவ்வாறு கற்றவரனைவரையுஞ் செற்றன ரென்னில் யார்தான் தமிழை யோதுபவராவர்? யார்தான் ஓதிய பயனை எய்துபவராவர்? தமிழணங்கின் பாடு அன்றே ஒருவாறு முடிந்திருக்குமன்றோ! பின்னரிவர் அவளை யணிபெறச் செய்வது எங்ஙனம்?

பொறாமையினால் ஒட்டக் கூத்தர் இதைத் தழுவினர் என்னில் அப் பொறாமை எத்தகைத்தோ அறிகுவோம். அஃது எத்தகைத்த தாயினும், சற்றும் மனமிரங்காமல் வரிசை வரிசையாய்ப் போலிப் புலவர்களை ஒட்டக் கூத்தர் வதைத்திருந்தார் என்பது ஒப்பவுளதோ? மேலும் இவர் பிறர்பால் பொறாமை கொள்வதற்கு எள்ளளவேனும் ஏதுவில்லை. இவரே தக்க வித்தையைக் கொண்டு அரசற்குக் குருவாயும் அரசனால் பெருமையாய் மதிக்கப்பட்டவராயும், குறைவிலாச் செல்வமுடையராயும் இருக்குங்கால் இவர்க்குப் பொறாமை எதற்கு?

இறுதியாகத் தன்னுயிராங்கு மன்னுயிரைக் காக்க வேண்டிய மன்னன் இத் தொழிலை ஆதரித்திருப்பானோ

என்பதையும் கவனிக்கவேண்டும். கொலைக்குக் கொலையே யன்றிச் சொற்குற்றம் பொருட் குற்றங்களுக்குக் கோறற் றண்டனை யிலையே; மனங்கொண்டவாறு இப்படி யிரண் டொன்ருய் முடிந்து தலையிறங்கப் போட்டு வெட்ட விட் டால் மற்றும் மாந்தர்கள் வாளாவிருப்பரோ? அக் காலத்தில் இராஜாங்கம் இருந்த நிலைமைக்கு அரசன் கதி என்னவாயிருக்கு மென்றெண்ணுவது? ஆகையால் இவ் வகோரச் செயல் நடந்திராதென்றே நாம் நினைக்க வேண்டும்.

இக் கொடுஞ் செய்கையைப் புலவர் கைக் கொண்டி ரார் என்ருல், மற்று மெவ்வளவோ புலவர்களிருக்க இவரை மாத்திரம் இத்துணைக் கொடூரமாய் யாரும் நினைப்பது யாது காரணம் பற்றி யென்பதோர் கேள்வி பிறக்கும். இப் புலவர் பெருமானுர் தமது இளம் பருவத் திருந்தே மேம்பட்ட செல்வவந்தராய் அரசனது தயவை யும் அவனது பணிவையும் மேற் கொண்டிருந்தாராதலால், இவர் மமதைப் பேயின் வயத்தராய் வழுவி நடந்திருக்க லாம் என்பது தோன்றுகின்றது. அகம்பாவம் யாவையும் ஒழிக்கு மாதலால் இவர் தாம் கொண்ட மமதையால் பாம ரர், பாவலர் முதலியோரது அன்பை யிழந்தவராய்ச் சற்று மாருக வெண்ணப்பட்டு, கர்ண பரம்பரையாய்த் தாழ்த் திக் கூறப்பட்டனர். இத்துட்ட பேயை வழிபட்டோர் யாவரேயாயினும் மற்றவர்களிடையில் பெருந தாழ்வெய் துவ ரென்பது இழுக்காது. இக் காரணம் பற்றியே ஒட்டக் கூத்தர் பிறர்பால் வசை யெய்தினரே யல்லாமல் வேறெதையுங் கொண்டன்று. இச் செயல் கொண்டே அம்பட்டன், தட்டான் கொல்லன் முதலியோர் பாடல் புனைந்து நம்மிடையில் உலவும் சில கவிகளைச் சிலர் கற்பிக்க நேர்ந்ததெனக் கூறி இவ்விஷயத்தை முடிப்போம்.''

# நான்காம் இயல்

## ஊடல் நீங்கி யுள்ளங் குளிர்தல்

புகழேந்திப் புலவர் சிறைச்சாலையிலிருந்து வருந்தி வருவதைக் குமார குலோத்துங்கன் மனைவி கேள்வி யுற்றுப் பெரிதும் வருந்தினாள். அப் புலவருக்கு அத்தகைய துன்பத்தை யுண்டாக்கியவர் ஒட்டக்கூத்தர் என்பதையும் அம் மாதரசி யுணர்ந்தாள். அப்பொழுது குமார குலோத்துங்கன்மேல் அவ்வரசிக்குப் பெருங்கோபம் உண்டாயிற்று. ஆகையால், அப் பெண்மணி கதவைத் தாளிட்டு உள்ளே பெருங் கோபத்துடன் இருந்தாள்.

குமார குலோத்துங்கன் வழக்கமே போல் தன் மனைவி யிருக்கும் அந்தப்புரத்திற்குச் சென்றான்; அங்குக் கதவு மூடப் பெற்றிருப்பதைக் கண்டு தன் மனைவியைப் பல முறை யழைத்தான். அரசி அரசனுக்குப் பதில் அளியாமல் வாய் வாளாமை மேற் கொண்டிருந்தாள்.

அப்பொழுது குலோத்துங்க மன்னன், 'நாம் நம்முடைய மனைவியின் மனம் வருந்தும்படி ஒன்றும் செய்யவில்லையே! இவளுக்கு நம்மீது கோபம் உண்டானதற்குக் காரணம் யாதாயிருக்கலாம்!' எனச் சிறிது நேரம் நின்றவிடத்திலேயே பற்பல விதமாய்ச் சிந்தித்தான். அவனுக்கு ஒன்றும் புலப்படவில்லை. பின்பு, அம்மன்னவன் ஒட்டக்கூத்தரிடம் சென்று தன்னுடைய மனைவியின் கோபத்தைத் தணிக்கும்படி வேண்டினான்.

குமார குலோத்துங்கன் விரும்பிய வண்ணமே ஒட்டக்கூத்தர் அரசியின் அந்தப் புரத்திற்குச் சென்று கதவு தாளிடப் பெற்றிருத்தலைக் கண்டு,

"கீரத்துஞ் சிரத்துங் களிக்குங் களிற்றுடைக் கண்டன்வந்தான்
இரத்துங் கபாட மினித்திறப் பாய்பண் டிவனணங்கே
உரத்துஞ் சிரத்துங் கபாடந் திறந்திட்ட துண்டிலங்கா
புரத்துங் கபாட புரத்துங்கல் யாண புரத்தினுமே,"

என்னுஞ் செய்யுள் ஒன்று கூறினர்.

வந்துள்ளவர் ஒட்டக்கூத்தர் என்பதை யுணர்ந்த அரசி, 'ஒட்டக்கூத்தர் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்,' என்று மற்று மொரு தாழ்ப்பாளிட்டாள். உடனே ஒட்டக்கூத்தர் வெகுண்டு, குலோதத்துங்க மன்னன்பால் வந்து, நிகழ்நததைக் கூறினர்.

குமார குலோத்துங்கன், தன்னுடைய இல்லாளின் பெருஞ் சினததிற்குக் காரணததைக் கண்டு பிடிக்க வேண்டும் என்று நெடு நேரம் சிநதித்தான். பின்பு, அம் மன்னவனுக்கு ஓர் எண்ணம் தோன்றிற்று. அஃதாவது தான் புகழேநதிப் புலவரை நீண்ட காலம் சிறையில் அடைத்து வைத்திருப்பதே அரசியின் கோபத்திற்குக் காரணமாய் இருக்கலாம் என்பதே. உடனே அம் மன்னவன் புகழேநதியாரிடஞ் சென்று தன் மனைவியின் கோபத்தைத் தணிதது வரும்படி வேண்டினன்.

அரசன் கருத்தின்படியே புகழேந்திப் புலவர் அரசியிருக்கும் அந்தப்புரஞ் சென்று,

"தாபங் கமழும்பைங் கோதையன விக்ரம சோழன்மன்னர்
தீபன் புறங்கடை வந்துநின றனின திருப்புருவச்
சாபங் குனிய விழிசிவப் பத்தலை சாய்த்துநின்ற
கோபந் தணியன்ன மேயெளி தோநங் குடிப்பிறப்பே

இழையொன் றிரண்டு வகிர்செய்த வற்றொன் றிணையுமிடை
குழையொன றிரண்டுகட் கொம்பனையாய் கொண்ட கோபந் தவிர்
மழையொன் றிரண்டுகைம் மானு பரன்கண்டன் வாயில்வந்தாற்
பிழையொன் றிரண்டு பொறுப்பதன் றோகடன் பேதையர்க்கே

நானே யினிச்சொல்லி வேண்டுவ தில்லை நளினமலர்
தேனே கபாடந் திறந்துவிடாய் செம்பொன மாரிபொழி
மானே ரபய னிரவி குலோத்துங்கன வாயில்வந்தாற்
றூனே திருக்கரதின கைம்மல ராகிய தாமரையே,''

என அம் மாதரசியின் மனம் உருகும்படி மூன்று செய்யுள் கூறினார்.

உடனே குலோத்துங்கன் மனைவி கோபந் தணிந்து கதவைத் திறந்து புகழேந்திப் புலவரைப் பெரிதும் உபசரித்தாள்; தான் கொண்ட கோபத்தின் காரணத்தைக் கூறி வருந்தினாள். அக்காலை, புகழேந்திப் புலவர் பல இன் சொற் கூறி அரசிக்கு ஆநந்த மூட்டினார்.

பின்பு, புகழேந்திப் புலவர் குலோத்துங்க மன்னவனிடஞ் சென்று, "அரசி கோபந்தணிந்தனள்," என்று கூறினார். உடனே குலோத்துங்கன் தன் மனைவிபால் சென்று இனித் தான் எவ்வகையிலும் புகழேந்திப் புலவர்க்கு இன்னல் புரிவதில்லை யெனக் கூறினன். அப்பொழுது அரசியின் முகம் அன்றலர்ந்த தாமரையை யொத்தது. அன்றுமுதல் குமார குலோத்துங்கன் புகழேந்திப் புலவரை மிகக மரியாதையுடனே நடத்திவந்தான்.

# ஐந்தாம் இயல்

## புகழேந்தி பாட்டில் குற்றம் கூறல்

'வெண்பாவிற் புகழேந்தி,' எனச் சிறப்புற்றொளிரும் புகழேந்தியார் இயற்றியுள்ள நன்னூலாம் நளவெண்பாவில், அப் புலவர் பெருமானார் சூரியன் குடபால் மறைந்த பின்னர் அந்திப் பொழுது வந்துற்ற காட்சியை ஓர் அரசனது வருகையாகவும், அவ்வமயத்து மலர்ந்து விளங்கிய முல்லையை அவ்வரசனது மாலையாகவும், மல்லி

கைப் போதிற் படிந்து தேனைக் குடித்துக் களித்து இன்னிசை பாடா நின்ற வண்டுகளை, அரசன் முன்பு வெண் சங்கூதிச் செல்வோராகவும் உருவகஞ் செய்து,

‘ மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லையெனும்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புனமாலை யந்திப் பொழுது,’

எனப் பாடிய பாட்டில், கவிச் சக்கிரவர்த்தியாராகிய ஒட்டக் கூத்தர் குற்றம் கூறியதாக ‘ஒரு பொய்க் கதை கீழ்வருமாறு வழங்கி வருகின்றது :—

ஒட்டக்கூத்தர், புகழேந்திப் புலவரை நோக்கி, “ புலவரே, நீர் அந்திப் பொழுதின் வருகையைப் பற்றிப் பாடியுள்ள பாட்டு மிக அழகிதே. இருப்பினும், சங்க நாதஞ் செய்வோர் சங்கின்பின் பக்கத்தை ஊதுதலன்றோ இயல்பு ? அங்ஙன மிருக்க, வண்டுகள் மல்லிகையின் மேற் புறத்தில் இமிர்தலைச் சங்க நாதஞ் செய்வோரின் தொழிலாக உருவகஞ் செய்து பாடியது சிறிதும் பொருத்த மின்று,” எனக் கூறினாராம்.

அக்காலை, புகழேந்திப் புலவர், “ கட்குடியனுக்கு முன்னதிது பின்னதிது எனவும் தெரியுமோ,” எனப் பதில் இறுத்தனராம். இது வெறும் கட்டுக் கதையென்று பின் வருவனவற்றான் யாவரும் தெள்ளிதின் உணரலாம்.

பன்னிரண்டாழ்வார்களுள் ஒருவராய் விளங்கும் பெரியாழ்வார் தாம் இயற்றியுள்ள நான்காம் பத்தில் எட்டாந் திருமொழியில்,

‘ பல்லெயிற்றுக் கேழலுமாய் வாளெயிற்றுச் சீயமுமாய்
எல்லையில்லாத் தரணியையு மவுணனையு மிடந்தானூர்
எல்லியம்போ திருஞ்சிறைவண் டெம்பெருமான் குணம்பாடி
மல்லிகைவெண் சங்கூதும் மதிளரங்க மென்பதுவே,’

என மல்லிகையைச் சங்காகவும், வண்டுகளைச் சங்க நாதஞ் செய்வோராகவும் உருவகஞ் செய்துள்ளார்.

மாணிக்கவாசகர் எனும் பெரியார் தாம் இயற்றிய திருக்கோவையாரில்,

"மல்லிகைப் போதில்வெண் சங்கம் வண்டுத,"
எனக் கூறியுள்ளார்.

இவ்வண்ணம் பெரியோர்களால் கையாளப் பெற்றுள்ள ஓர் உருவகத்திற்குப் புலவர் திலகராய் விளங்கிய ஒட்டக்கூத்தர் குற்றம் கூறினர் என்றல் சிறிதும் பொருத்தமில் கூற்றென்பது பல அறிஞரின் துணிபு.

# ஆறும் இயல்

## ஈட்டி யெழுபது பாடி யேற்றமுறுதல்

ஒரு நாள் ஒட்டக்கூத்தர், திரிபுவனம என்னும் ஊரிலுள்ள சோமன் என்னும் தம்முடைய நண்பனைக் கண்டு வருவதற்குச் சென்றார். சோமன், ஒட்டக்கூத்தரது வருகையைக் கண்டு மழை கண்ட மயிலென மகிழ்ந்தான்; பின்னர், ஒட்டக்கூத்தருடன் சிறிது நேரம் அளவளாவி ஆநந்தமுற்றான். உண்மைச் சிநேகனுடன் உரையாடுதலினால் உண்டாகும் ஆநந்தம மிகச சிறநததன்றோ? ஒட்டக்கூத்தர் சோமனது வீட்டில் சில பகல் இருந்தனர். அக்காலை, காவேரி யாற்றிற்கு அருகிலுள்ள ஆவூரில் உறைந்த செங்குந்தர்கள், ஒட்டக்கூத்தர் வாக்கால் பாடல் பெறவேண்டுமென்று கருதி, அவர் இருக்கும் இடமறிந்து, அங்கு வந்து, அப் புலவரை வணங்கி நின்றனர். ஒட்டக்கூத்தர், செங்குந்தரை நோக்கி, "ஐயன்மீர், நீங்கள்

விரும்புவது யாது?" என வினவினர். அச் செங்குந்தர்கள் ஒட்டக்கூத்தரை நோக்கி, "அறிவிற் சிறந்த புலவரே, வேளாளரது மரபையும் வன்னியர் மரபையும் புகழ்ந்து, கல்வியிற் சிறந்து விளங்கும் கம்பர் என்னும் பெரியார், 'ஏரெழுபது,' 'சிலையெழுபது,' என்னும் நூற்களை முறையே பாடியுள்ளார். செட்டி மக்கள் மரபைப் புகழ்ந்து சயங் கொண்டார் என்னும் பெரியார், 'இசையாயிரம்,' எனனும் நூல் ஒன்றைச் செய்துள்ளார். அது போல் நம்மரபைச் சிறப்பித்து நீர் ஒரு நூல் பாடியருள வேண்டும்," என்று மிக்க வணக்கத்துடன் வேண்டிக் கொண்டனர்.

செங்குந்தர் கூறியதைக் கேட்ட ஒட்டக்கூத்தர் சிறிது நேரம் ஆழ்ந்த யோசனையில் இருந்தார். பின்னர், அப் புலவர், செங்குந்தரை நோக்கி, "ஐயன்மீர், நமது குலத்தை நாமே சிறப்பித்துப் பாடிக் கொள்ளுதல் தகுந்த காரிய மன்று. நம்மினும் உயர்ந்த வருணத்தோர் நமது மரபைச் சிறப்பித்துப் பாடுவராயின், அஃது எல்லோரானும் விரும்பத்தக்கதாம்," என மொழிந்தார்.

ஒட்டக்கூத்தரது கூற்றைக் கேட்ட செங்குந்தர்கட்குப் பெருஞ்சினம் மூண்டது. உடனே அம் மக்கள் அவ்விடத்தை விட்டுச் சென்றனர். 'குலவபிமான மில்லாத இப் புலவன் கல்வியிற் சிறந்து விளங்குவதால் யாது பயன்? இத்தகையோன் உயிர் வாழ்தலினும் இறத்தலே நன்று', எனச் செங்குந்தர் அனைவரும் ஒன்று கூடிப் பேசினர். பின்னர், ஒட்டக்கூத்தரைக் கொன்று விடவேண்டுமென்று செங்குநதர் அனைவரும் தீர்மானித்துக் கொண்டு, தடி, வாள் முதலிய ஆயுதங்களுடன் நம் புலவர் இருக்குமிடத்திற்கு வந்தனர். செங்குந்தர் வருகையை யுணர்நத ஒட்டக்கூத்தர், தம் நண்பனாகிய சோமனிடம் அடைக்கலம் புகுந்தார். அதனைத் தமிழ் நாவலர் சரிதையில்,

“பழிகாரர் தொடர்ந்த பொழுது சோமன் வாசலில் ஓடிச் சொன்ன கவி” :—

“அடையென்பார் தள்ளென்பா ரன்பொன்றில் லாமற்
புடையென்பார் தங்கடைக்கே போகேம்—கொடையென்றால்
முந்துஞ்சோ மாபுலவனை முன்னவனே நின்கடைக்கீழ்
வந்துய்ஞ்சோ மாதலான் மற்று,”

எனக் காணப்படும் வெண்பாவான் நன்குணரலாம்.

சோமன், தன்னிடம் அடைக்கலம் புகுந்த ஒட்டக் கூத்தரைக் காக்க வேண்டு மென்னுங் கருணையுடைய வனாய்த் தன்னுடைய வொரு மகனைப் பெட்டியில் வைத்து மூடித் தன் வீட்டைச் சூழ்ந்து கொண்டிருந்த செங்குந்தர் களிடம் அப் பெட்டியைக் கொடுத்து, “இப் பெட்டியில் உள்ள புலவரை உமது விருப்பின்படி செய்மின்,” என்றனன். செங்குந்தர், ஒட்டக்கூத்தர் பெட்டியினுள் இருக்கின்றார் எனப் பெரிதும் மகிழ்ந்து, அப் பெட்டியைத் தனியிடத்திற்குக் கொண்டுபோய்த் திறந்து பார்த்தனர். உடனே பெட்டியினின்றும் சோமனுடைய புதல்வன் வெளிவந்தான். அவ்வற்புதத்தைக் கண்ட செங்குந்தர் சோமனது கருணைத் திறத்தை மிகவும் வியந்தனர். பின்னர், அத் தந்துவாயர், சோமனுடைய மகனைக்கொல்லாமல் விட்டு ஒட்டக்கூத்தரைத் தேடிச் சென்றனர்.

ஒட்டக்கூத்தர், சோமன் செய்த பேருதவியை யுணர்ந்து,

“தன்னுடைய தேவியர்க்குத் தார்வளவன் றானுரைப்ப
துன்னுடைய கீர்த்தி புயநலமே—துன்னுபுகழ்
சோமா திரிபுவனத் தோன்றலே நின்புகழை
யாமா றுரைக்க வினி,”

என வொரு வெண்பாவால் சோமனைப் புகழ்ந்து பாடினார்.

ஒட்டக்கூத்தரைத் தேடிச் சென்ற செங்குந்தர் சோமனது இல்லமடைந்து, அவ்வள்ளலை நோக்கி, “கருணையின் வடிவாய் விளங்கும் அறிஞரே, ஒட்டக்

கூத்தனுக்குப் பதில் உம்முடைய அருமைப் புதல்வனை எவ்வாறு மனந் துணிந்து பெட்டியில் இட்டீர்! நீர் செய்த காரியம் சிறிதும் தக்கதன்று. ஒட்டக்கூத்தன் எங் குளன் ?" என வினவினர். அப்பொழுது சோமன், செங் குந்தரை நோக்கி, "ஐயன்மீர்,

"சினமெனனுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும்,"

ஆதலான், உள்ளத்தைக் கவர்ந்து எழுகின்ற பெருஞ் சினத்தை யடக்கிக் கொள்ளுகின்ற குணமே சிறந்த குணமெனக் கற்றறிந்தோர் கருதுகின்றனர். நீங்கள் ஒட்டக்கூத்தரைச் சாதாரணப் புலவர்களுள் ஒருவரென மதிக்க வேண்டா. அவர் அரும் பெருங் காரியங்களையும் அரைக் கணத்தில் முடிக்க வல்லவர். அப் புலவர் பெரு மானுர் விரும்பும் வண்ணம் நீங்கள் செய்யின், நீங்கள் விரும்புவதை அவர் செய்யாமல் இரார்," என வுரை யாடிக் கொண்டிருக்கும் பொழுது ஒட்டக்கூத்தர் அவ்விடம் வந்தார்.

அரும் பெரும் புலவராய் விளங்கும் ஒட்டக்கூத்தர், செங்குந்தரை நோக்கி, "நீங்கள் விரும்பும் வண்ணம் யான் நமது குலத்தைச் சிறப்பித்துப் பாடுதற்குத் தடை யில்லை. ஆனுல், நமது குலத்தை நாமே யாதொரு காரணமு மின்றிச் சிறப்பித்துப் பாடிக் கொள்வோமானுல், அஃது உலகம் நகைத்தற்கிடனும். ஆகையால், என் கருத்தின் படி நீங்கள் செய்யின், உமது கருத்து முற்றுப் பெறும். அஃதாவது, கலைமகள் பூசையின் பொருட்டு நமது குலத் தில் உதித்துள்ள ஆயிரத்தெட்டுத் தலைப் பிள்ளைகளுடைய சிரங்களைக் கொண்டுவந்து நான் இருத்தற்குரிய இருக்கை யாகப் பரப்புவீராயின், யான் நமது ஆயுதமாகிய ஈட்டி யைச் சுட்டி ஒரு நூற் பாடி உலகினர் வியக்குமாறு செய்கின்றேன்," என்றுரைத்தார்.

வன்னெஞ்சராகிய ஒட்டக்கூத்தருடைய வன் சொற்களைக் கேட்ட செங்குந்தர், ஒன்றுந் தோன்றாது சிறிது நேரம் திகைத்து நின்றனர். செங்குந்தரது மன நிலையைக் கண்ட ஒட்டக்கூத்தர், கலங்கி நின்ற அன்னாரை நோக்கி, "வீரமே யணிகலன் எனக்கொண்டு வாழ்ந்து வந்த வீர மரபில் தோன்றியுள்ளோரே, இப்போது நீங்கள் மயங்கி நிற்றற்குக் காரணம் யாது? உங்கள் முன்னோருடைய வீரச் செயல்களை நீங்கள் கேட்டது மில்லையோ?" எனச் செங்குந்த மரபினரது வீரச் செயலை யெல்லாம் வெள்ளிடைமலை யென விளங்க அமைத்தனர்.

செங்குந்தர், தம்முன்னோருடைய வீரச் செயல்களை யெல்லாங் கேட்டு மனந் துணிந்து, ஒட்டக்கூத்தர் விருப்பின் படியே செய்வதாக அப் புலவருக்கு வாக்களித்துவிட்டு, நூல் இயற்றும் நாளைக் குறித்துக் கொண்டு சென்றனர்.

பின்னர், ஒட்டக்கூத்தர், தம்முடைய நண்பனை சோமனிடம் விடை பெற்று, உறையூர் அடைந்து, செங்குந்தர்க்கும் தமக்கும் நேர்ந்த வாதங்களையும், சோமனது வள்ளற்றன்மையையும், இறுதியில் செங்குந்தருடைய தலைப்பிள்ளைகளுடைய சிரங்களின் மேல் தாம் அமர்ந்து ஒரு நூல் செய்யத் தீர்மானித்துள்ளதையும், அவ்வற்புதச் சம்பவம் நடைபெறும் நாளையும் ராஜ ராஜச் சோழனிடம் தெரிவித்தனர். சோழ மன்னன், ஒட்டக்கூத்தர் கூறியவற்றைக் கேட்டு வியப்புங் களிப்பு முற்றனன்.

ஆயிரத்தெட்டுச் சிரங்களைக் கொடுப்பதாக ஒட்டக்கூத்தருக்கு வாக்களித்து விட்டுச் சென்ற செங்குந்தர் அனைவரும் ஒன்று கூடி, தலைப்பிள்ளைகளுடைய சிரங்களைப் பெறும் விதத்தைப் பற்றி நெடுநேரம் சிந்தித்து ஒருவித முடிவுக்கு வந்தனர். பின்னர், அக் கைக்கோளர், தாம்

செய்த முடிவை ஒரு திருமுகத்தில் வரைந்து, அதனைச் செங்குந்தர் உறைந்து வந்த பல நாடுகளுக்கும் அனுப்பினர். அத் திருமுகத்தை நோக்கிய ஒரு நாட்டினர் மாத்திரம் தலைப்பிள்ளையது தலை கொடுக்கும் தகுதியற்ற செய்கைக்கு மனமிசையவில்லை. ஆகையால், அந் நாட்டில் உறையும் செங்குந்தர்க்கு இன்றும், 'தலைகொடா மரபினர்,' என்னும் பெயர் வழங்கிவருகின்றது. அந் நாட்டினரொழிந்த மற்றைச் செங்குந்தரெல்லாம் தம் முன்னோரது வீரச் செய்கையை நினைந்து, என்றும் பொன்றுப் புகழினை யெய்த விரும்பி, தலைப் பிள்ளைகள் சிரங்களை வெட்டிக்கொண்டு வந்து, சோழ மன்னன் அரண்மனையடைந்து, ஒட்டக்கூத்தருக்குத் தமது வீரச் செயலைத் தெரிவித்தனர்.

செங்குந்தரது மன வன்மையைக் கண்ட ஒட்டக்கூத்தர் பெரிதும் வியந்தார். பின்பு, அப் புலவர் பெருமானர், செங்குந்தரை நோக்கி, "வீரமுந் தீரமுமுடைய ஐயன்மீர், உமது வீரச் செய்கையால் எனது மனம் குளிர்ந்து விட்டது. இனி, உமது விருப்பம் போல் யான் நடத்தற்குச் சிறிதுந் தடையில்லை. ஆதலால், நீங்கள் கொண்டு வந்துள்ள சிரங்களை யெல்லாம் சோழ மன்னனது சபா மண்டப வாயிலில் சிங்காதனம் போல் அடுக்கி, அதன்மேல் இரத்தப் பாவாடை விரித்து வையுங்கள். யான் விரைவில் அங்கு வந்து சேர்கின்றேன்." என்று கூறினர்.

ஒட்டக்கூத்தர் கூறிய வண்ணமே, செங்குந்தர், அறுபட்ட தலைகளை யெல்லாங் கொண்டுபோய்ச் சோழ மன்னனது சபா மண்டப வாயிலில் சிங்காதனம் போல் அடுக்கி, அதன்மேல் இரத்தப் பாவாடையை விரித்து, ஒட்டக்கூத்தர் வருகையை யெதிர் நோக்கி யிருந்தனர்.

இராஜ ராஜச் சோழன், தன்னுடைய அவைப் புலவ ராய் விளங்கும் ஒட்டக்கூத்தரது தெய்வீகச் செயலைக் காண விரும்பி, அமைச்சருடனும் மற்றைக் குழுவினருட னுஞ் சபா மண்டபஞ் சேர்ந்து, புலவர் வருகையை யெதிர் நோக்கி யிருந்தான். அக்காலை, ஒட்டக்கூத்தர், தாம் செய்ய வேண்டிய பூசையை முடித்துக் கொண்டு, பல விருதுகளுடன் சபா மண்டபத்திற்கு வந்து, செங்குந்த ரால் இடப் பெற்றிருந்த சிரச் சிங்காதனத் தமர்ந்து, 'ஈட்டி யெழுபது,' என்னும் ஓர் அரிய நூலைப் பாடி முடித்தனர்.

பின்னர், ஒட்டக்கூத்தர், அறுபட்ட செங்குந்தர்ச் சிரங்களெல்லாம் உடலொடு பொருந்தி யுயிர் பெற்றெழும் வண்ணம் கலை மகளை மனத்தின்கண் இருத்தி,

'கலைவாணி நீயுலகி லிருப்பதுவுங்
கல்வியுணர் கவிவல் லோரை
நிலையாகப் புரப்பதுவு மவர்நாவில்
வாழ்வதுவு நிசமே யன்றோ
சிலைவாண ருவிருந்தா யிரம்புயங்கள்
துணிந்துமுயர் சிவ னுற்றன
தலையாவி கொடுத்திடுஞ்செங் குந்தருயிர்
பெற்றிடநீ தயைசெய் வாயே,'

என்னுமோர் செய்யுளைக் கூறினார். உடனே, அறுபட்ட தலைகள் கலைமகள் இன்னருளால், உடலொடு வந்து பொருந்த, உயிரிழந்த செங்குந்த தலைப் பிள்ளைகள் உயிர் பெற்றுத் தூங்கி யெழுந்தவர் போல் எழுந்தனர். அவ்வற்புதச் செயலைக் கண்ட அவையினர் அனைவரும் வியப்பும் திகைப்புங் கொண்டனர்; ஒட்டக்கூத்தரது பேராற்றலைப் பெரிதும் புகழ்ந்தனர்; கலை மகளே கண் கண்ட தெய்வமெனக் கருதிக் களிப்புற்றனர். ஒட்டக் கூத்தரை ஒருகால் இகழ்ந்து பேசிய செங்குந்தரெல்லாம், அப் புலவரை வாயார வாழ்த்தி வந்தித்தனர்.

# ஏழாம் இயல்

## தரணியில் வாழப் பரணியைப் பாடல்

தமிழ் நாடு மூன்றனுள் ஒன்றாய் விளங்கும் சோழ நாட்டை அகளங்கன் எனனும் சிறப்புப் பெயர் பெற்றுச சிறந்தோங்கிய 'ராஜ ராஜன்' ஆண்டு வநத காலத்தே, குடந்தை வீரச் சிங்காதன மடத்தில் அருநதவர் பலர் அறநிலையை மேற்கொண்டு ஒழுகி வநதனர்.

ஒரு நாள், அத் தவசிகளுள் ஒருவர், 'கல்லானிழற் கீழா யிடர் காவாய்,' என்னும் தேவாரப் பதிகத்தை இன்னிசையுடன் ஓதிக்கொண்டே பலியேற்பதற்கு நந்தம் ஒட்டக்கூத்தப் புலவரது வாயிற்கண் நின்று கொண்டிருந்தார். அக்காலை, ஒட்டக்கூத்தர், அத்துறவியார் பாடிய தேவாரத் திருப்பாடலின் பொருளை யமைதியுடனிருந்து பன்முறை சிநதித்தும், அப் பாடலின் உண்மைப் பொருள் அவர்க்குத் தெளிவாய்ப் புலப்படவில்லை. ஆகையால், அப் புலவர், அத் தவசியை நோக்கி, "அற நிலையில் நின்றொழுகும் அறிஞரே, நீர் இப்பொழுது பாடிய தேவாரத் திருப்பாடலின் பொருளைக் கூறுக," என்று மிக்க வணக்கத்தோடு வினவினார்.

ஒட்டக்கூத்தர் வினவைக் கேட்ட முனிவர், அப் புலவர் தம்மைச் சோதிக்கின்றார் என்றெண்ணிப் பெருஞ் சீற்றங் கொண்டு, கூத்தரைக் கனலேழ நோக்கி, "அத் திருப் பாடலின் பொருளை யான் அறியேன். அப் பாடற்கு நீ பொருள் கூறினும் அது பிழையே யாம்," என இடி யிடித்ததுபோல் கூறினர்.

அக்காலை, ஒட்டக்கூத்தர் கடுஞ் சினத்தின் வயத்தராய்க் கசை கொண்டு பலி யேற்க வந்த முனிவரை

யடித்தார். அத் தவசியார் அவ்வடி பொறுக்காமல் ஆவி நீத்தார்.

ஒட்டக் கூத்தரது கொலைத் தொழிலைக் கேள்வியுற்ற மற்றைத் தவசிகள் தம் ஞானாசிரியர்பால் விடை பெற்று, வில், வாள் முதலிய பற்பல ஆயுதங்களுடன் கூத்தர் இல்லம் நோக்கி வந்தனர். அத் தவசிகள் வரவை முன்னரே யுணர்ந்த ஒட்டக்கூத்தர், அம் முனிவர்கள் தம் உறைவிடம் உறுதற்கு முன்பே வீட்டை விட்டு அரசன்பால் அணுகி, வெருளி யென்னும் பேய் வாய்ப்பட்டுத் தாம் செய்த கொடுஞ் செயலைக் கூறி நின்றார்.

ஒட்டக் கூத்தர் கூறியதைக் கேட்ட மன்னன் திடுக்கிட்டுச் சிறிது நேரம் அசைவற்று நின்றான்; 'கல்வியிற் சிறந்த பெரும் புலவரே இத்தகைய இழிந்த கருமம் புரியின், யாம் இவர்க்கு எவ்விதத் தண்டனை விதிக்க வல்லோம்!' எனப் பற்பல வண்ணம் எண்ணி யெண்ணி யிருந் துயருழந்தான்.

அவ்வமயத்து, ஒட்டக்கூத்தரைத் தேடிச் சென்ற தவசிகள், அப் புலவரை யில்லிற் காணாமையால் அரசனது அரண்மனை அணைந்தனர். தவசிகள் வரவை யுணர்ந்த மன்னவன், ஒட்டக்கூத்தரை ஒருபால் மறைத்து விட்டு, அம் முனிவர்கள்பாற் சென்று, அவர்கள் வருகையின் காரணத்தை வினவி நின்றான். அம் முனிவர்கள் மன்னனை நோக்கி, "மா நிலம் புரக்கும் மன்ன, மாதவரைக் கொன்ற மதி கெட்ட புலவன் ஒருவன் உன்னிடம் போந்துளான் என்பதுணர்ந்து நாங்கள் இவண் வந்தோம். அக் கொடுந் தொழிலாளன் ஈண்டிருப்பது உண்மையேல், அன்னோனை எம் முன்னர்க் கொணர்ந்து விடுக," எனப் பேரிடியின் பெரு முழக்கம்போல் அறைந்தனர்.

முனிவர்கள் சினந்து கூறிய மொழிகளைக் கேட்ட வேந்தன் அரண்மனையுட் சென்று, ஒரு புறத்தமர்ந்து, இரு தலைக் கொள்ளி யெறும்பு போன்ற தன்னிலையை யுன்னி வருந்தினன். பின்னர், அப் புரவலன் தன் அருமைப் புதல்வனை யழைத்து வரும் வண்ணம் அமைச்சரை யேவினன். சிறிது நேரத்தில் காவலனுடைய மைந்தன் கடுகிப் போந்து தந்தையை வணங்கி நின்றான். அப் பொழுது நிருபன் தன்னிலையை மைந்தனுக்குக் கூறி மனங் கவன்றான்.

ஆபத்தில் உதவும் பிள்ளையே அருமந்தப் பிள்ளை யென்பதை அம் மன்னன் மைந்தன் ஓர்ந்து, தந்தையை வணங்கி, "புலவர்க்குப் பதிலாக என்னை அம் முனிபுங்கவருடன் அனுப்புக," என்றான்.

மைந்தன் புகன்ற இன் சொல்லைக் கேட்ட மன்னவன் மன மகிழ்ந்து, தன் ஆருயிர்ப் புதல்வனை மூடு பல்லக்கில் இட்டு மூடி, முனிவர்களுக்கு அப் பல்லக்கைச் சுட்டிக் காட்டி, "இச் சிவிகையில் உள்ள புலவன் முனிபுங்கவரைக் கொன்ற முழு மூடனாகையால் நீங்கள் இக் கொலைப் பாதகன் மூஞ்சையும் நோக்காது இவனைக் கொலை புரிந்து விடுக," என்று சிறிதும் இரக்கமின்றி யியம்பினன்.

முனிவர்கள், அரசன் கொடுத்த சிவிகையை ஓரிடத்தில் கொண்டு போய் வைத்து, அதனுள் இருப்பவர் ஒட்டக்கூத்தரோ அல்லது மற்றொருவரோ என்று ஐயுற்றுப் பல்லக்கின் மேல் மூடியைத் திறந்து பார்த்தனர்; பார்த்ததும் ஒட்டக்கூத்தர்க்குப் பதிலாக அரசனுடைய அருமைப் புதல்வன் அமர்ந்திருந்தலைக் கண்டு பெருவியப் புற்றனர். அரசிளங்குமரனை முனிவர் அனைவரும் மெய்யுற அணைத்துக் கொண்டு, அரசன் மனத் துணிவை யுள்ளி யிறும்பூதெய்தினர்.

பின்னர், அரச குமரன், முனிவர்களை நோக்கி, "பெருந்தவமுடையீர், என் தந்தையாரும் யானும் மனம் ஒருப்பட்டே இக் கருமம் புரிந்தோம்; ஆதலான் நீங்கள் என்னையே அவ் வொட்டக்கூத்தராக உன்னி நீங்கள் நினைத்த கருமம் புரிமின்," என்றான்.

முனிவர்கள் அரசிளங் குமரன் மனத் துணிவைக் கண்டு, பெரு வியப்புற்று, அவனுடன் அரசன் மாட்டுச் சென்று, மன்னன் முகத்தை நோக்கி, "மன்பதையின் உயிரைக் காக்க மைந்தனது இன்னுயிரையும ஈந்துவக்கும் மன்ன, உயிர்க் கொலை புரிந்தவன் ஒரு புறம் இருக்க, மாசற்ற நின் மைந்தனை நீ எங்களுடன் போக்கியது நீதியோ? கொலைத் தொழிலாகிய அக் கொடுந் தொழிலைக் கூசாது புரிந்த ஒட்டக்கூத்தன் எங்குளான்?" என்றனர்.

முனிவரது முனி வுரையைக் கேட்டு உளங் கலங்கி நின்ற அரசன்பால் ஒட்டக்கூத்தர் சென்று, "அறக் கடலாய் விளங்கும் அண்ணலே, நீ சிறிதும் வருந்தற்க. யான் அம் முனிவரோடு செல்கின்றேன்," என்று கூறி விட்டு அம் முனிவர்களுடன் சென்றார்.

ஒட்டக்கூத்தர், அத் தவசிகளுடன சிறிது வழி கடந்த பின்னர், அந்திப் பொழுது வந்துற்றது. அக்காலை, ஒட்டக்கூத்தர், முனிவர்களைப் பார்த்து, "முக்குறும் பெறிந்துள்ள முனிவர்களே, யான் நாடோறும் மும் முறை முழுமுதற் கடவுளை வணங்கும் நியம முடையேன். இப்பொழுது அந்திப் பொழுது அணமியுள்ளதால், இறை வனை யிறைப் பொழுதேனும் நினைத்தற்கு என் மனம் விழைகின்றது. யான் அங்ஙனம் புரிந்து வருதற்கு நீவிர் விடைதந்தருள்க," என்று மிக்க விநயத்துடன் கேட்டுக் கொண்டனர்.

ஒட்டக்கூத்தர் கருத்திற்கு முனிவர் அனைவரும் இசைந்தனர். பின்னர், கூத்தர் அவண் இடையறாது ஓடிக் கொண்டிருந்த அரிசொலாரா நதியை யணுகி, அதனுள் படிந்து ஆடி, ஐந்தெழுத்தை யுரைத்துக் கொண்டே திரு வெண்ணீற்றை நுதலில் அணிந்து, ஆநந்த நடஞ் செயும் அரனாரைச் சிறிது போழ்து அகத்தே யமர்த்தினார்.

பின்பு, ஒட்டக்கூத்தர், முனிவர்கள் விலகி யிருக்கும் அமயம் பார்த்து ஆண்டிருந்த முனைச்சாளம்மை யென்னும் பெயர் வாய்ந்த காளி கோயிலினுள் சரேலெனப் புகுந்து கதவடைத்துத் தாழிட்டுக் கொண்டனர். புலவரது தீரச் செயலைக் கண்ணுற்ற முனிவர்கள் பெருஞ் சீற்றங் கொண்டு, 'ஒட்டக்கூத்தனை யொரே நொடியில் கொல்வோம்,' என விரைந்தோடி வந்தனர்.

அப்போழ்து அம் முனிபுங்கவருள் ஒருவர், மற்றை யோரை நோக்கி, "நாம் எக் கருமத்தையும் அமைதியுடன் ஆழ்ந்து ஆலோசித்த பின்னரே செய்யத் துணிய வேண்டும். ஒட்டக்கூத்தன் இப்பொழுது ஒளிந்துள்ள இடம் காளி கோயிலாதலானும், காலம் இரவா யிருத்தலானும், நாம் அப் புலவனை இப்போழுதே கொலை புரியத் துணிவது சிறிதும் ஏற்புடைத்தன்று. பொழுது புலர்ந்த பின்னர் நாம் அப் புன்றொழிற் புலவனது இன்னுயிரைப் போக்கலாம்," என்று கூறினார். பின்பு, அம் முனிவர்கள் அனைவரும் அன்றிரவு முழுதும் ஊண் உறக்க மின்றிச் செங்கதிர் ஞாயிற்றின் வரவை நோக்கிய வண்ணமாயிருந்தனர்.

காளி கோயிலில் பதுங்கி யிருந்த ஒட்டக் கூத்தர், காளியைப் பற்பல வண்ணம் துதித்துத் தமக்கு நேர்ந்துள்ள இடுக்கணைத் தீர்த்தருளும்படி வேண்டினர். அக் காலை, காளித் தேவி, ஒட்டக்கூத்தர் முன் தோன்றி, "ஐய,

நீ சிறிதும் கவலற்க. உனக்கு நேர்ந்துள்ள இன்னல் இனிது நீங்கும் வழி யொன்றுளது. உன்னைக் கொலை புரியத் துணிந்து ஈண்டுப் போந்துள்ள முனிவர்களது குல தெய்வமாய் மிளிரும் வீர பத்திரக் கடவுள்மேல் ஓர் அரிய நூல் இக்கணமே யியற்றித் தருக," என்றனள்.

அப்பொழுது ஒட்டக்கூத்தர் காளியின் கட்டளைப்படியே பொழுது புலருமுன் வீரபத்திரக் கடவுள்மேல் பரணி யென்னும் ஓர் அரிய நூல் பாடி முடித்தனர்.

இரவெல்லாம் உறக்க மின்றிக் கடுங் கோபத்துடன் காளி கோயிலைக் காத்து நின்ற முனிவர் அனைவருமே பல் கதிர் பரப்பிப் பண்புடன் தோன்றிய இள ஞாயிற்றினைக் கண்டதும், காளி கோயிலின் கதவைத் தட்டி, ஒட்டக் கூத்தரை வெளியே வருமபடி யழைத்தனர். அவ்வமயம் ஒட்டக்கூத்தர், "நான் இரவெல்லாம் உறக்க மின்றி உம்பொருட்டு இயற்றிய இனிய நூல் இதோ. இதனைப் படித்துப் பாருமே," என்று கோயிற் கதவிலிருந்த துளையின் வழியே அந் நூலை நீட்டினர். முனிவர்கள் அந் நூலைக் கையகம் வாங்கிப் படித்துப் பார்த்தனர். ஒட்டக் கூத்தர், வீரபத்திரக் கடவுளின் வெற்றியையும் பெருமையையும் தமது கல்வித் திறனால் படிப்போர் உள்ளம் பரவசமாகும் வண்ணம் மிக்க அழகுபட இயற்றி யுள்ளதை முனிவர்கள் கண்டு, பேரானந்தங் கொண்டு, புலவர் மேல் தாம் கொண்டிருந்த சீற்றந் தணிந்தனர்.

பின்னர், அம் மாதவர், காளி கோயிற் கதவிலிருந்த துளையின் வழியே தம் வாட்களை யெல்லாங் கொடுத்து விட்டு, ஒட்டக்கூத்தரை நோக்கி, "புலமையிற் சிறந் தோங்கும் புலவரே, நீவிர் இப்பொழுது சிறிதும் அச்சமின்றிக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வரலாம். நீர் எமது முழுமுதற் கடவுளாய் விளங்கும் வீரபத்திரக்

கடவுள்மேல் இயற்றிய நூல் எங்கள் கருங்கல் மனத்தையுங் கரைத்துவிட்டது. இப்பொழுது எமது மனம் உமது திருமுகத்தைக் கண்டு களிக்கப் பெரிதும் விழைவுறுகின்றது," என்று அன்புடன் கலந்த இன் சொற்கள் பல இயம்பினர்.

உடனே ஒட்டக்கூத்தர் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து முனிவர்களை வணங்கி நின்றார். முனி புங்கவர், அப்புலவரது நுண்ணறிவையும் பெருங் கல்வியையும் வியந்து பேசி அவ்வறிஞரைப் பல்வகையான் புகழ்ந்தனர்.

பின்பு, ஒட்டக்கூத்தர், தாம் இயற்றிய தக்க யாக பரணியைக் கங்கை வீரேசர் சந்நிதியில் அரங்கேற்றிப் பற்பல பரிசுகளைப் பெற்று அரசன் அவைக் களத்தை யணுகி நிகழ்ந்தனவற்றை யெல்லாம் அம் மன்னனுக்கு, எடுத்துரைத்தனர். ஒட்டக்கூத்தரது அருஞ் செயலை யெல்லாம் கேள்வியுற்ற மன்னன், பேருவகை பூத்து, அப் புலவரை மார்புறத் தழுவினன். பின்னர், அப் புலவர் பெருமானார் அரசன் அவைக்களத்தில் பெரும் புகழுடன் இருந்து வந்தார்.

முற்றிற்று.

Printed by Penrose & Co., 19, Sunkurama Chetty Street, G.T., Madras.